உ

சிவமயம்.

சாக்கையென்று வழங்குகிற

அளகாபுரி

# உமையம்பிகை பிள்ளைத்தமிழ்.

---

இஃது

கண்டனூர்-அருணாசலசெட்டியார் குமாரர்

முத்துக்கருப்பசெட்டியார் கேட்டுக்கொள்ள

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

கட்டளையின்படி

திரிசிரபுரம்

சி. தியாகராசசெட்டியாரால்

செய்யப்பட்டது.

---

இப்பிரபந்தஞ்செய்தார்பாற் கல்விபயின்றவர்களாகிய

கும்பகோணம் மகாதளம்பேட்டை

இராமலிங்கதேசிகர் கேட்டுக்கொள்ள

பிறைசை

இராமகிர்ஷ்ணசெட்டியாரால்

தஞ்சை - சதாவதானம்

சுப்பிரமணியஐயரது

சென்னப்பட்டணம்

வித்தியாவர்த்தனி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

பிரமாதிஸு தைமீ



உ

கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.

திருவாவடுதுறை - ஆதீனவித்துவான்

திரிசிரபுரம்

## மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்க ளியற்றியது.

கூறுவழுதியும்பாராட் டிலனிவ்வாறென்றளகை
குடிகொள்செல்வி
யூறுமுளத் துவகையுறச் சொற்பொருள்கற் பனையணி
யோ டுலப்பில்பத்தி
யேறுசுவைமிகப்பிள்ளைத் தமிழியற் றினல்கினன்பேர்க்
கியையவென்று
நாறுபுகழ்ச்சிரகிரிவாழ் தியாகராசப்பெயர்நன்
னாவலோனே.

---

தஞ்சைமாநகரம் - சதாவதானம்

## சுப்பிரமணிய ஐயராற் செய்யப்பட்டது.

அந்நாளிலலைக்கடலி லரிப்புலவனெடுத்தீந்தா
னமிழ்தைமேவு
மின்னாளிற்கலைக்கடலிற் றியாகராசப்புலவ
னெடுத்துத்தந்தான்
பொன்னாள்வாழளகையுமையம்பிகைபிள்ளைத்தமிழைப்
புகலிரண்டும்
இன்னாளுமொருபொருள வாயினுமீகைக்காம்பே
ரியைபெவற்கே.

இப்பிரபந்தஞ்செய்தார்பாற் கல்விபயின்றவராகிய
கும்பகோணம்-மகாதளம்பேட்டை
## இராமலிங்கதேசிகராற்
செய்யப்பட்டது.

பாமேவுதென்னாட்டிற் பெருஞ்செல்வசிறையளகைப்
பதியில்வாழுஞ்
சேமேவுவிரசேகரபபெருமானிடப்பாகஞ்
சிறக்கநல்லோர்
நாமேவுமருளுருக்கொண் டொளிருமையம்பிகைபாத
நளினப்போதிற்
பூமேவுபன்னலஞ்சேர் தமிழ்ப்பிள்ளைக்கவிமாலை
புனைந்தான்மன்னே. (க)

கன்னலஞ்சேர்ந்தோங்குமெழிற் பணைசூலவுசிராப்பள்ளி
கவினவாழ்வோன்
நன்னலஞ்சேர்மணிமன்று ணடநவில்குஞ்சிதகமல
நாளுமுள்வோன்
எந்நலமுந்தருபெருஞ்சீர்க் கல்விநலமெனக்குதவு
மினியசீலன்
பன்னலமுஞ்செறிகலைதேர் தியாகராசப்பெயர்கொள்
பாவலோனே. (உ)

---

இப்பிரபந்தஞ்செய்தார் மாணாக்கருளொருவராகிய
பிறைசை
இராமகிருஷ்ணசெட்டியாராற்
செய்யப்பட்டது.

பொன்னாடுமுதலாய பன்னாடும்பணிந்தேத்தப்
பொலிவுற்றோங்கி
மின்னாடுசெஞ்சடிலத் திறையவன்பஃறளிகொண்டு
மேவலாலே
சொன்னாடுபுலவரெலாம் புகழ்தோறுமென்னாட்டுந்
தூயதான
தென்னாடுதென்னாடென் றினிதுபுகல்வளமலிந்த
செழியர்நாட்டில். (௧)

தவளநீறுடலணிந்து வெற்றரையாய்க்கமலவிதி
தலையோடேந்திக்
கவளமேற்றுழன்றபரன் றோழனாகாரணவன்ன
கடவுள்கொள்ளத்
துவளலிலாப்பொன்னுடை பல்லணிபல்லனமென்றுந்
துதையநல்கும்
பவளவாரிசமனைகை வணிகரொடுவிளங்களகைப்
பதியின்மாதோ. (௨)

வீரையடிமுளைத்தெழுந்த பரன்வாமத்தினிதமர்ந்து
மேவுமன்பர்
சிரையுறவருளுமுமை யம்பிகைபூங்கமலமலர்ச்
செய்யதாளி

லேயையுறுசொல்லணியே முதலாயபல்லணியு
மியைவுற்றோங்க
நாயையுறுதமிழ்ப்பிள்ளைக் கவிமாலைபுனைந்தணிந்தா
னயக்கமாதோ. (௩)

சீர்பூத்தவளமருவு திரிசிராப்பள்ளியில்வாழ்
சிறப்பின்மிக்கோன்
போர்பூத்தநல்லறங்கள் யாவையுந்தன் னுருவாகப்
பிறங்கக்கொண்டோன்
கார்பூத்தவெனதவிச்சை யிருள்கெடவோட்டுறுஞானக்
கதிராயுள்ளான்
நார்பூத்தபலகலைதேர் தியாகராசப்பெயர்நன்
னுவலோனே. (௪)

---

இப்பிரபந்தஞ்செய்தார் மாணாக்கருளொருவரும்
நாகபட்டணம் நேடிவ் ஸ்கூல் தமிழ் முனிஷியாரும் ஆகிய,
கும்பகோணம்
சபாபதிபிள்ளையாற் செய்யப்பட்டது.

பூவிருக்குநான்மறைப்புத் தேளொடுமால்பணியும்
புண்ணியன்வெண்ணீறணிபுங்கவனொருபான்மேவுங்
காவிருக்குமளகையுமை யம்பிகைதாண்மலர்க்கிழ்க்
கவினுறநான்மயப்பிள்ளைக் கவிமாலைபுனைந்தான்
பாவிருக்கும்பன்னூலி னரியபெரும்பொருளைப்
பழுதறவென்போல்வரெளி திற்றெருளவருளுந்
தேவிருக்குந்தூயதிரி சிரகிரியிலுதித்த
தியாகராசப்பெயர்கொள் செந்தமிழ்நாவலனே.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

சிவமயம்.

அளகாபுரி

# உமையம்பிகை பிள்ளைத்தமிழ்.

---

விநாயகர் துதி.

பூமேவுகொன்றைப்புராணன்சடாடவிப் பொங்கு வெண்கங்கைநதியைப் - புனைசிந்துரங்கமுழுவி யொளிர்வாணிநதியாப் புரிந்திருகவுட்குழிவழித், தேமேவுகார்க்கடம் பெய்துகாளிந்தியாச்செய்துவிளையாடல்புரியுஞ் - சிறுகட்பெருஞ்செவிக் குஞ்சரக்கன்றினிரு செஞ்சரணநெஞ்சுள்வைப்பா, நாமேவுகலைமகளு மலைமகளுமோங்குதன் னயனமாயுறதலுலக - நன்றுணரவென்றும் வழிபடுமவர்க்குயர்கல்வி நற்செல்வமினிதுவளரப், பாமேவுமின்னருட்பார்வையாற்செய்துபூம்பணைசுலவுமளகாபுரிப் - பைம்பொற்றிருத்தளியில் வாழுமுமையம்பிகை பசுந்தமிழ்க்கவிதழையவே (க)

நால்வர் துதி.

நீர்மலிவயற்சண்பைவாய் ஞானபோனகமுணின் மலக்கன்றையென்று - நிலவுமம்மான்றிருப் பெயராற் பெருங்கடலை நீந்தியெழுதவமேருவைத், தார்மலிகுழற்பரவையாருள்ளவாரியிற் றளையுணுமிளங்களிற்றைத் - தற்பரன்முடியின்மண் ணேற்றவன்பூற்றெழுஞ் சைவப்பழத்தைநினைவாங், கார்மலிமிடற்றெம்பிரானைப்பு

ணர்ந்தொரு கணேசப்பிரான்முருகவேள் - கருதுபல்ல ண்டவுயிரின் றுமெழிலிளமூலைக் கன்னியென் றருமறை சொலத், தேர்மலியுமணிமறுகு திகழுமளகாபுரிச்செல் வமெனவீற் றிருக்குந் - தெய்வதப்பிடிநடைத் தையலு மையம்பிகை செழுந்தமிழ்வளம்பெருகவே. (௨)

ஆசாரியர்துதி.

பொருண்மலிதிருக்கயிலை நந்தியெம்பெருமான் புகன்றவருணூலையாரும் - போற்றுசெந் தமிழினருண் மெய்கண்டசிவன்மரபு பொலிஞானபானுவாகித், தெருண்மலியெழிற்றுறைசையம்பதியிலமர்நமச் சிவாயகுருசாமியம்பொற் - றிருவடியுமவன்மரபி லடியார்முமலப்பகைசெகுத்தொழிவிலின்பமருள,வருண்மலியுருக்கொளம்பலவாணதேசிக னலர்ப்பதாம்புயமுநன்மை - யமையாதுதிமைக ளமைந்தொருங்குறவாழ மத்தாணியாயவிச்சை, யிருண்மலியுநாயே னுளத்துமருவப்பொருவி லியலுணர்ந்தவர்கள்குழுமி - யிலங்களகையம்பதி துலங்குமுமையம்பிகை யிருந்தமிழ்வளம்பெருகுமே. (௩)

வேறு.

தண்ணியகுணத்துச் சான்றவர்விரும்பத் தவலரும்பெருமைசான் றினிமை - ததும்பியூற்றெடுக்குஞ் செந்தமிழ்புரிந்த தவமெனப்பவமகறருமம், பண்ணியகருதாச் சிறியனேன்பெரிய பாக்கியப்பயனெனச்சண்பை - பன்னுமாமூர்நன் னுவலூர்மறைகள் பகர்திருவாதவூரிவைக, ளண்ணியபெரும்பேறெலாஞ்சிராப்பள்ளிய

டைதரவப்பெருந்தலத்தி - லமர்ந்துவாழ்தருமீனாட்சி சுந்தரப்பே ராரியனடிமலர்பணிவாம், நுண்ணியவறி ஞர் பற்பலர்குழுமி நூல்பலவாய்கழகஞ்சேர் - கோன் மைசாலளகா புரியமருமையை நுவலுறுந்தமிழ்தழை தரவே. (௬)

---

## காப்புப்பருவம்.

### திருமால்.

தேர்பூத்தசெங்கதிரும் வெண்கதிரும்விழியாக்கொள் சிவபிரானைக்குந்தொறும் - திருமுகத்தாமரைமலர்ந்தருள்சுரந்துவாய்ச் செவ்வாம்பனறவநல்கி, யேர்பூத்தவனையவிரு போதுமொருபோதினி லியைந்தென்று மலர்தலில்லை - யென்னல்யொய்யென்னச்செய் தளகையமபதியமரு மெம்மனையை யினிதுகாக்க, கார்பூத்தமறுமார்ப மிளிர்கவுத்துவமணிக் கனலொளிபடர்ந்ததேய்ப்பக் - கருமுகினனந்தலையோர் செம்முகில்வதிந்துறல் கடுப்பவெண்கடலுதித்த, சீர்பூத்தபங்கயச் செல்வியிருகொங்கைச் செழுங்குவடெதிர்ந்துதாக்கச் - செங்குங்குமச்சே றளாவியொளிதிகழத் திளைக்குமொரு பச்சைமாலே. (௧)

### வீரசேகரநாதர்.

நிலவுபொழியிள மதிதணமுதமு முதியபணிகொடு விடமுமுமிழ்தர - நிகரில்கதிரொனவாளுலாவிய வேணிமீமிசைச்சூட்டினர், நிறையுமுதிர்சுவை மதுரமொழு

கிய நறையிதெனநுவலினியதமிழ்மறை-நெடியபொழி
ல்வளைவாதவூர்வரு நாவலோர்சொலத்திட்டினர், நினை
யுமயிலையில்வணிகமகளுட றகனமிடுபொடி புகலியிறை
முன - நிகழுமுயிரொடுவாகுலாவுறு சோதிமாதெனக்
காட்டினர், நிமலமுறுதமிழ்மொழிசொலரசர்த மகடுவ
ளர்பிணிகொடியவமணர்க - ணெறியிலுறவொடு வாழ்
வுருவண மாயவேதபுத்தோட்டினர், இலவமலர்புரை
யதரமடமயி லியல்செய்பாவைகொள்புலவியகலுற - வி
ருளினிருமுறை தூதுபோயொரு நாவலூரனைக்கூட்டி
னர், இலகுமிரணிய சபையினிடுநட மகிழுமொருபுலி
முனிவனருளிய - விளையமதலையை மேயபாலலை வாரி
கூயழைத்தூட்டினர், இயலுமியலுணர்பெரியர்தமிழொ
டு சிறியவெனதுபுன் மொழியுமினிதுற-விசையுமிருசெ
விமிதுபானில வூறுவால்வளைத்தோட்டினர், இறைவர்
முதுமறை யறைவரதன்முடி யுறைவரகிலமுநிறைவர
கறையுறு - மெழில்செய்மிடறுடைவிரசேகர நாதர்தா
ண்முடிக்கிட்டுதுங், குலவுதிருமுக மெனுமொர்தடமதி
னிறையுமருளெனுமுதகமுழுகிமெய் - குளிரநனிவிளை
யாடுசேலென வேயுலாவிநற்றாட்பொதி, குவளைநறும
லர்வெருவியகலுற வொருவிவிரிகதிர்புரையவொளிவி
டு-குழையையிகலுற மோதிவார்கணை கோடியோடுறத்
தாக்கிமென், குமிழின்மிசைமறி தரல்செய்துளமழன்
முழுகுமெழுகெனவுருகுமடியவர் - கொடியபவவனநூ
றிமான்வன மேவவேசெலுத்தாத்திகழ், குவிகையொ

டுபணிவிழையுமிருநிற மருவுசததள மலரிலரிவையர் -
குறிகொள்பணிசெய வேவுவாள்விழி யாளைமேவுவிற்
சூற்புய, லுலவுகொடுமுடிதிகழுநெடுமலை யரசுமகிழ்த
ரும்மனைவிதொடியணி - யொளிசெய்திடுபுய மானவேய்
மிசை யேறுதோகையைப்பாற்பொலி, யுததிவருமுதிர்
சுவையவமுதொடு மினிமைகுதிகொளுநறியகனிகளி-
னெழுகுமிரதமதூறுபான்மொழி கூறுமோர்குயிற்பே
ட்டினை, யுணருமுளவிருளிரியவெழுதரு சுடரையெமை
வழியடிமைகொளுமரு - ளுபயமலரடியாளைமாமுகி லா
ரும்வாரியைப்போற்பெரு, குடுவுமுயர்தருதிகிரிகிரிநிக
ரெயிலும்வளைவுறுமளகையமர்தரு - முமையையகடுளை
யாதுபேருலகினுமாயினைக்காக்கவே. (உ)

அழகுவிநாயகர்.

முற்றுணர்பெரியருள மானநற்காட்டினு - முற்றி
யபொழிலளகை யேய்தளிக்கீழ்த்திசை, யுற்றிடுசிகரியி
னு மேவுபொற்பாற்பொலி - யுத்தமவழகுமத வானை
யைப்போற்றுதும், பொற்றவருடையபெருமானுழைக்
கூக்குரல்-பொத்தியசெவிகளினி தாகவெய்ப்பாற்றிடக்,
கற்றிடுமழலையமு தூறுசொற்றேக்கிடு - கற்புடையெ
ழில்கொளுமை மாதினைக்காக்கவே. (௩)

முருகக்கடவுள்.

அரியமறைமுடியுமலர் மாரற்பொடித்திடு - மம்மலர்
பிறைமுடியுமுயர் காவற்படைப்பய, ரரிபிரமர்முடியு

மத வேழச்சிரத்துறு-மமரரிறைமுடியுமொளிர் பூவொ
த்தபொற்பதங், கரியவரையினுமருவு சாரற்றடத்தினு
ங-கதிர்முதிரவொசிபசிய வேனற்புனத்தினுங், கமழ
வொருகுறவனிதை யேவற்குவக்குமுட் - கனிவினெடு
திரிமுருக வேளைப்பழிச்சுதும், பிரியமலிதரவிமய மா
ல்வெற்பளித்திடு-பிடியையடியவர்கள்பெரு வாழ்வைத்
தவத்துயர், பிரமபுர மதலைபர ஞானச்சுவைத்தமிழ்-பெ
யவமுதமுதவுமுலை யாளைக்கதிர்த்திடப், புரியுமுயர்கன
கமணி மாடத்தலத்துறை-புனைமகளிரினிதுவிளை யா
டக்கரத்தினிற், புதுநிலவுபொழியுமதி மானைப்பிடித்தி
டு-புகழ்வளமையளகையுமை யாளைப்புரக்கவே. (ச)

நான்முகன்.

மன்னுறுமியற்புலவர் மகளையனையெனன்மரபுவ
ழுவமைதியெனாவிலலே - வழுவதுவழாநிலையெனத்
துணியமெய்மைபுகன் மாமறைமுழங்குவாக்கான், மின்
னுறுந்தான்பெற்ற நிலமகளையொருதனை விரும்பிப்ப
யந்ததந்தை - விழையுமனையாவளித் தனையெனவழை
க்குமலர் மேவுதேவன்புரக்க, துன்னுறுந்தான்பெறு
பலுயிருளோருயிராய்த் துலங்குமலையரையனுய - தூய
மகனைத்தனைப் பெறுமேனையன்னைவிழை துணைவனு
வினிதளித்துத், தென்னுறுந்தந்தையென மரபுவ
ழுவாமலே சிந்தைகளிகூர்ந்தழைக்குஞ் - செழுமலர்ப்
பொழில்சூழு மளகையம்பதியிற் சிறக்குமாதேவிதனை
யே. (ரு)

இந்திரன்.

தவளக்குருவெண் ணிலவெறிக்குஞ் சாரற்கயிலை ச்சயிலமிசைத் - தடித்துக்கான்றுசூன்மேகந் தங்கல் போலநான்மருப்புக், கவளக்கரடக் கவுட்கடவெண் களிற்றுப்பிடரி னொளிர்குலிசங் - கரத்திற்றாங்கி வீற் றிருக்குங் கண்ணாயிரங்கொள்விண்ணாடன், பவளத்துவ ர்வாயமுதூட்டும் பாவைமாருக்கெதிர்நன்றி - பண்ண ல்போலக்காளையர்கள் பசுங்கற்பகத்தின் பூங்கொம்பு, துவளக்கோட்டிக் கனிபறித்தத் தோகைமார்செவ்வா யூட்டச் - சுடர்பொன்மாடமோங்களகைச் சுரும்பார் கு ழலைப்புரக்கவே. (௬)

திருமகள்.

நறைமலியிதழ்க்கமல மனையையிருதனையர்க்கு ந ல்லணையெனக்கணையென - நன்றுதவியென்றுமொரு வுதலின்றிமருவுதலை நாடியணையாடரவின்மேற், பொ றைமலிமகட்டனி யிருத்தியுளருத்தியொடு போய்த்தன் னையீன்றதீம்பாற் - புணரியிற்கணவற் கிடத்தியவன்ம ருமம் புணர்ந்தவளுணர்ந்துகாக்க, கறைமலிதரத்திக ழு மொருதிருமிடற்றுமுக் கட்பெருங்கருணைப்பிரான் - கற்றைப்பிறைக்கொழுந் தொளிர்குடிலமாம்பெருங் கா ட்டினிற்கங்கைமங்கை, சிறைமலிதரத்தனி யிருத்திய வன்மேனியிற் செம்பாதிகொண்டுமகிழுந் - தேவியை க்காவிவா ழாவிசூழளகையமர் செல்வப்பிராட்டி தனை யே. (எ)

கலைமகள்.

வண்ணமுறுதன்னிறமன் வெண்மதிக்குறவுற்று மலராதமலர்மிசைத்தான் - மருவுகுறைவுந்தன்னிறச் செங்கதிர்க்குறவு வாய்ந்தலருமலருறைதவ, னண்ணுநிறைவுந்திருவுளத் தோர்ந்துவெண்மதிக் கதிகவுறவார்ந்துகுவியா - தலருநாயேனுளக் கமலத்தும்வதியும் வெள்ளன்னத்தினடிபரசுவாந், கண்ணமருநெற்றிப் பிரான்றன்னிறத்தைக் கடுக்குமெழுநாவன்னியைக் - கைக்கமலமுறவைத்தல் போற்றன்னிறத்தைக் கடுக்குமொருநாவன்னியைப், பண்ணமருமின்னிசை மிழற்றிவண்டுழுசெழும் பங்கயக்கரமமைத்துப் - பளகிலாவளமலியு மளகைமாநகர்மருவு பைந்தோகையைக்காக்கவே. (அ)

துர்க்கை.

தண்டேனிறைக்குங் கற்பகப்பூந் தாமத்தடந்தோட்சதமகனூர் - தானம்பொழியும் வெண்பகடுந் தருமன்கடவுகரும்பகடுங், கண்டோட்டெடுப்பவருமசுரக் கரியவெருமைப்பகடுதலை - கவிழவரியேறுகைத்துவருகன்னித்தெய்வங்காத்தளிக்க, திண்டோண்மைந்தர் மாடமிசைச்செறியுமதியைப் பெருங்காதற் - சிறியவிடையார் வதனமெனச் சென்றுமுத்தமிடல்கண்டவ், வண்டோலிடுபூங்குழலார்வாய் மணிமுத்தரும்ப நகைபுரியும் - வளமைமலியு மளகைநகர்வதியுந் துதிகொளுமையினையே. (கூ)

சத்தமாதர்.

சிறையனநடவுறு மாதைச்சினத்தெழு - திறல்வி டைகடவிய தாயைப்பசுத்தெழி, றிகழ்தருமயிலிவர் வா ளைப்படப்பொறி-செறியசிவயிரியை யூரச்சமர்த்தியை, யறைமுறைழையுறையரி யேறக்களித்திடு - மரிவையைம தகய மீதுற்றுறப்பொலி, யழகியையுழலுறு பேயிற்சிற ப்புற - வமர்தரவுளமகிழ் வாளைப்பழிச்சுது, நறைகம ழ்தருநிழல் வாழ்விற்களிப்பது - நளினமென்மலர்மனை மேலுற்றிருப்பது, நகுமணியரவணை மீதிற்கிடப்பது- நலமலரடிதொழு வாருக்களித்திடு, மிறைவியைமதிநு த லாளைக்கருத்தெழு - மெழிலியைநிகர்குழ லாளைத்த மிழ்ச்சுவை, யினிதுணரளகையின் மேவுற்றுறப்பொ லி - யெழில்கனிதருமுமை யாளைப்புரக்கவே. (௧௦)

முப்பத்துமூவர்.

ஏடகமுறச்சிறை யளிக்குலமுழக்கமது மிக்குப் பெருக்கேறு கோகனகவிற்குடி - யேறிமகிழ்பொற்கொ டிமறைக்குலநடிக்குமெழி லைப்பெற்றநற்போதனுவுறு கலைக்கொடி, சூடகவொளிக்கரதலத்தளிர்கள் பற்றியி ரு பக்கத்துமுற்றேகமாமலரடித்துணை - தோமறுமுள த்திடை நிறுத்தியதவத்தினர் மூனுற்றுச்சிறப்பேறு பேறருளொருத்தியை, நாடகமணிப்பொதுவினிற் பி றைமுடிப்பர னவிற்றக்களிப்போடுநாடுறுவிழிக்கடை- நாமுறுபவக்கடல்சுவற்றவெனிடத்துமுற வைத்துப் பு ரப்பாளையாரருளுவட்டெழ, வாடகமதிற்புரிசை சுற்

ருமளகைப்பதியின் வைப்புத்தனச்சிரின் வாழுமொரு சத்தியை - யாதவருருத்திரர் மருத்துவர்வசுக்களெனு முப்பத்துமுக்கோடி தேவர்கள்புரக்கவே. (கக)

காப்புப்பருவ முற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்.

——o——

பொன்பூத்தமாமகளு நாமகளுமருவுதம் புண்டரிகவில்லமிக்க - பொலிவுறப்புரியிரவி யும்பொலிவறச்செயும் புதுமதியும்விழியாக்கொளு, மின்பூத்தசெஞ்சடைப் பெருமான் றிருக்கண் விரும்பிப்புதைக்குமாடல் - விழைதரினிடத்துவிழி யொன்றினிற்செயுமாறு வேண்டியுளுவந்துதாங்கு, மன்பூத்தசெங்கைமலர் புவியிற்பதித்தொரு மலர்த்தாளிருத்தியொருதாண் - மாணுறநிமிர்த்திரு மணிக்குழைகள்செவியிடைவயங்குவில்வீசியாடத், தென்பூத்ததிருமுக மெடுத்தினிதசைத்தம்மை செங்கீரையாடியருளே - தேருரும்வளமறுகி னேராருமளகையுமை செங்கீரையாடியருளே. (க)

வள்ளிதழ்த்தாமரை வதிந்தசெயலெனவொளிர் மணித்தவிசிருத்தியங்கை - வந்தமைதெரிந்துபா கீரதிப்புனலாட்டி மதியெனற்கியையநுதலின், வெள்ளொளிவிரிக்குநீ றிட்டுமோசென்னவொளி விரிதிலப்பொட்டணிந்து - விளைநிலவுபொழிநித் திலச்சுட்டிசாத்தியெழி

ல் வீங்குசூழியமுடித்துக், கள்ளவிழ்மலர்க்கரத் தேங் கிமுத்திட்டுக் கவின்றமடிமீக்கிடத்திக் - கலைமதிசெவ் வாம்பலொடு கலவுறலெனச்செம்மை கனிவாயின்வெ ண்சங்கினுற், றெள்ளமுதமூட்டியொரு மேனைசீராட் டுமயில் செங்கீரையாடியருளே - தேரூரும்வளமறுகி னேராருமளகையுமை செங்கீரையாடியருளே. (உ)

மருவளரிதழ்க்கமல முகைமுறுக்குடையவரி வா ய்ந்தசிறைவண்டர்குழுமி - மதுவுண்டுபாண்செய்ய ம ழுவிளங்கதிர்கான்று வார்கடன்முகட்டெழுபவன், கரு வளர்மிடற்றோன் கரத்தானுநின்செங் கரத்தானு நகை தோற்றமை - கருதியவன்விழியா யிருந்துவளகத்துநா ண் காண்குற்றமிருதோழிமா, ருருவளரிலந்திறந்துத வுகுணமோதிமெல வோட்டிக்கடைக்கணருண்மிக் - கு றுவான்றிருச்செவியி லுற்றெனமணிக்குழைக ளொ ளிர்கிரணம்வீசியாடத், திருவளரும்வதனமதி மிசை யாடவென்னம்மை செங்கீரையாடியருளே - தேரூரும் வளமறுகி னேராருமளகையுமை செங்கீரையாடியருளே

கண்ணிலவுமலர்மண்டு மொருபெருங்கானமுங் க டுவிடந்தோன்றிரண்டு - கடலுமிருகனகவெற் புந்தா ங்குகொடிபோற் கவின்றமலர்மாதர்முதலோர், பண்ணி லவுதுதிமொழிச் செந்தேனுவட்டெழீஇப் பாய்செழு ங்குமுதமலரப் - பைம்பொற்சுடர்க்கன்று துன்றுமெ ன்செவ்விதழ்ப் பங்கயக்காடுகுவிய, வுண்ணிலவுமானங்

தவெள்ளப்பெருக்கெழுந் தோங்குமலைவாரிபொங்க-வு
லவாப்பெருங்கருணை யெனுமமிழ்தவெள்ளமிக் கூற்றெ
ழூந்தொளிருமுறுவற், றெண்ணிலவுபொழிவதன ம
தியாடவென்னம்மை செங்கீரையாடியருளே - தேரு
ம்வளமறுகி னேராருமளகையுமை செங்கீரையாடியரு
ளே. (௪)

கோங்கலர்நறுவிதழி வேய்ந்தகுடிலத்திளங் குழ
விமதியமுதுகுப்பக் - குரூஉமணிச்சுடிகைப் படப்பு
ழையெயிற்றரவு கொடியகருவிடமுகுப்ப, வங்கரமமர்ந்
தசெந் தழல்வீசுவெம்பொறி யடர்ந்துமேனோக்கியெ
ழூவெள் - ளலையார்புனற்கங்கை வீசுதண்டுவலைகீழார்ந்
துவிழவரவணையினேன், பங்கயமலர்த்தவிசி னொ
டும்பணியமறை பாடவடியார்குழாங்கள் - பரவுபேரா
னந்த வெள்ளப்பெருக்கிற் படிந்தழுழ்கித்திளைப்பச்,
செஙகனகமன்றிலெம் பெருமானையாட்டுமான் செங்கி
ரையாடியருளே - தேருரும்வளமறுகி னேராருமளகை
யுமை செங்கீரையாடியருளே, (௫)

வேறு.

கடியவிர்மணிகள் குயிற்றுதலைப்பணி கதிரொளி
கான்றுடக் - கட்டிவிடுந்தண்டரளச்சுட்டி கவினிலவி
ன்றுடப், படியகனுதலிடு பொட்டொடுசெம்பொற் பட்
டமொளிர்ந்தாடப் - படர்வுறுதண்ணிய புண்ணியநீற்
றொளி பாய்ந்துமிளிர்ந்தாட, வடியவிர்வேல்விழி வார்கு
ழைசேர்தரு வள்ளைகலந்தாட - மலிதருகருணை வழிந்

தொழுகுந்திரு வதனமலர்ந்தாட, வடியவருளமலரமர் தருபூரணி யாடுகசெங்கீரை - யருள்வளரளகையினிரு ள்வளர்குழலுமை யாடுகசெங்கீரை. (சு)

செங்கமலந்திக ழுங்குமுதம்பொலி தேறல்வழிந் துறல்போற் - றிருமுகமொளிர்திரு வாயெழுமூறல் சிற ந்துவழிந்தோட, மங்குலெழுந்து விளங்குமிளம்பிறை மானவியற்கைமணம் - வளரளகத்திடை மிளிர்தரளப் பிறை வாணிலவொளிகாலப், பொங்கிருண்மங்க விழுங் குறுகாதணி பொற்குழைவெயில்வீசப் - புரையறுசிந் தை புகுந்துவதிந்திடு பூந்தாளணிமூரல, வங்கலுழ்தரு திரு மேனியசைந்திட வாடுகசெங்கீரை - யருள்வளரள கையி னிருள்வளர்குழலுமை யாடுகசெங்கீரை. (எ)

வேறு.

பழமறைமுடியினி லமர்தருசீர்கொள் பெரும்பே றே - பதமலர்நினைபவ ருளமலரூறுபசுந்தேனே, மழவி டையுறைசிவ பரன்முடிசூடுநறும்பூவே - மலிபவவெயி லற வடிநிழலீதருபைங்காவே, குழலிசைவிழைவுறு ம ழலைகள்பேசுசெழும்பாகே - குணமிலெமொழியையுநல மொழிபோன்மகிழுந்தாயே, யழகியதிருமுக மசைதர வாடுகசெங்கீரை - யளகையில்வளரிள வளமயிலாடுகசெ ங்கீரை. (அ)

வேறு.

இமயமலைக்கரசுள மகிழ்மேனையணங்காரென் - னி ருகணினுட்பொலி யொளிமணிவாவெனநன்றேதக்,

கமலநிகர்த்திடுகரமுனனீண்முனெழுந்தோடிக்-கவினும டித்தல மிசையழகாரவுவந்தேறித், தமனியவெற்புற ழ் கதிர்முலையூறமுதுண்டேயேர் - தழையுமுகத்தவண மகிழுறவேயுமிழுந்தாயே, யமலரிடத்துறுமுமையவளா டுகசெங்கிரை - யறையளகைப்பதியுறைபவளாடுகசெங் கிரை. (௯)

வேறு.

பாவிலிசைத்திட வாரமுதுந்தேனும்பாலும் - பா குமெனத்தமி ழார்சொலுவந்தேதந்தேயென், னுவிலி ருக்குமினுரிடை நங்காய்மங்காத-நானமணத்தெழுவார் குழலெந்தாய்செந்தேனுர், பூவிலிருப்பவர்நாரணர் வெ ங்கோபங்கூர்வெண் - போதகமுய்ப்பவர் தேவர்தொழு ஞசீரந்தாளாய் - சேவிலிருப்பவர்மேவுமை செங்கோ செங்கிரை-சீரளகைப்பதியார்மயில் செங்கோசெங்கிரை.

செங்கீரைப்பருவ முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

---*---

கண்ணார்திமிர்ந்து நறுங்கலவை தோய்ந்துமுழுகி மதர்த்தெழுந்து - துணைத்துப்பணைத்துக் கதிர்த்தமு லை சுமந்துநுடங்குமிடைமடவா, ரெண்ணம்பொருந்த விளையாடு மெழின்மேனிலத்துச்செம்மணிக-ளிழைத் துக்குயிற்றுஞ் செய்குன்றத் திருளைவிழுங்குசுடரொழு ந்து,விண்ணம்பொலியுஞ்செழுஞ்சுடரோன் மேவிக்கட வுமொருகாற்றேர் - விசித்துப்பிணித்தபசும்புரவி விழி

களொருங்கு முகிழ்த்திடச்செய்,வண்ணம்பொலியுமள கைநகர் மயிலேதாலோதாலேலோ - வளமாமறைகள் புகழ்கருணை வடிவேதாலோதாலேலோ. (க)

உளருமழலைச்சுரும்பர்புகுந் துழக்கித்துவைத்து மகரந்த - மூதியுதிர்த்துப்புதியமது வுண்டுதெவிட்டு மலர்க்குழலார்,தளருஞ்சிறுநுண்ணு சுப்பொசியத் தரணி யொளிகால்மணிக்கழங்கு - தளிர்க்கையேந்தி யோச்சி டச்சந் தானக்கிளையிற்சிக்கவுதிர், கிளருங்கனியக் கழங் கென்னக் கிட்டிப்பிடித்தேயஃதன்மை - கெண்டைவிழி யினுறக்கண்டுங் கேடிலுவகையுளத்தோங்க, வ்ளருமா டமலி யளகை மயிலேதாலோதாலேலோ - வளமாம றைகள் புகழ்கருணை வடிவேதாலோதாலேலோ. (உ)

தேங்குஞ்சுவைமிக் கோங்குநறுச் சிந்துநந்தஞ் சோலைதருந் - தேமாங்கனியி லினியதெனிற் றெரியலா மென்றரிவிழியார், வீங்குங்கொங்கை தாங்கிநனி மெலி யுமருங்குனலிவகற்றல் - விழையத்தழைசெம் மணிவ டமும் விரிவெண்ணிலவுசொரிவடமுந், தாங்குமெழில் கொளரமாதர்தங்கைக் கொடுத்தேயங்கவர்பாற் - றக மென்மலர்க் கற்பகக்கனியைத் தளிர்போன்றெளிர்பூங் கரநீட்டி, வாங்குமாடமலியளகை மயிலேதாலோதாலே லோ - வளமாமறைகள் புகழ்கருணை வடிவேதாலோதா லேலோ. (ங)

தீற்றுஞ்சுதைவெண் ணிலவெறிக்குஞ் செழுமாட த்தின்மேனிலத்துத் - திங்கண்மணியினணிதிகழச் செ

ய்துகிளைத்ததசும்பினங்கள், கூற்றும்வெருவப் பொரு ங்கடிய கொடியநெடியவடிவேற்கட் - கோதைமாத ருல வுதொறுங் குலவுநிலவுமுகமதிகண், டேற்றுங்குளிர்நீ ரொளிர்மைந்த ருறு மார்பளைந்துகளைந்தமண - மூறுங் கலவைச் சேறுகெழீஇ யுறச்செய்வழுக்கலறக்கழுவி, மாற்றும்வளஞ்சே ரெழிலளகை மயிலேதாலோதாலே லோ - வளமாமறைகள் புகழ்கருணை வடிவேதாலோ தாலேலோ. (சு)

கொந்தாரந்தார் செருகுகருங்குழலார்கழலார்பதக் குமரர் - கொங்கைக்குவடும் புயக்குவடுங் கூடவூடலோ டவெள்ளி, ரிந்தார்கவிகை மைந்தனெவ ரெவரிங்ககன்று தனித்திருப்பா - ரென்றுசென்று நாடுறத்தன் னே ரார்தேரோடுலவலெனச், சந்தாடவியிற் றவழ்ந்துரு ந் தண்ணெனருவிதோய்ந்துமலர்த் - தாதுபூசித் தமிழ் மணந்து தழைமாளிகைச்சாளரங்கடொறு, மந்தாநிலம் புக்குலவளகை மயிலேதாலோ தாலேலோ - வளமாம றைகள் புகழ்கருணை வடிவேதாலோதாலேலோ. (ரு)

வேறு.

கொங்குவிரிந்த நறுந்தொடைதங்கிய கோதாய்கா தாருங் - குழைபொருதெழிலுறு குமிழ்மிசைமறிதரு கூரார்வார்வேலு, மங்கவடுந்திறல் கொண்டொளிரம்ப கமானேதேனேயென் - மலவிருளிரிதர வெழுதருசுட ரொனு மாதேதாதேயு, மங்கமலர்திகழ் மங்கையர்கும்பி ட வாயாரேயாரு - மடியவரிடுபணி புரிதரவருள்புரி யா

யேபாயேறுர், சங்கரர்பங்கில் விளங்குமிளங்கிளி தாலோதாலேலோ - தமிழ்தெரியளகையி னமிழ்துறழ்மொழியுமை தாலோதாலேலோ. (௬)

கந்தமலர்த்தரு நந்திவளைத்திடு காரார்சோராருங் - கதிர்முடிதிகழ்பனி மலைவயினிழல்விரி காசார்தேசோடுஞ், சிந்தைகளிப்புற வந்துசனித்தெழில் சேராநாரார்வஞ் - செறிதரவிரசித கிரிமுடியமர்தரு சீரார்தாராக, வுந்துபனிக்க திரிந்துமுடிக்களி ரூடேகூடாவோ - ருலவையொடொளிரிரு கவுளிழிகருமத மூறுவாறுகுந், தந்தியளித்தரு ளந்தமடப்பிடி தாலோதாலேலோ - தமிழ்தெரியளகையி னமிழ்துறழ்மொழியுமை தாலோதாலேலோ. (எ)

வேறு.

அந்தரவிமையவர்புரந்தர னந்தெழில்வனசவயனந்துள வணியுமாயோனே - டங்கணவரவணிதருஞ் சிவ சங்கரவருள்புரிவையென்றுற வலறியேசேரக், கந்தரநிலவவிடமுண்டவ னந்தளிரடிபணியுமன்பர்கள் கவினவேபூணுங் - கண்டிகைநுதலணியும்வெண்பொடி கண்டுணலொழிகொடியவம்பர்கள் கழுவிலேயேற, முந்தருள்வளவன்மகண்மந்திரி சிந்தையுண்மகிழவரசன்சுர முதியகூனேக - முண்டகவயல்சுலவுவெங்குரு வண்டவமதலையுணவின்சுவை முதிருமாணூர்பால், சந்தணியிளமுலைசுரந்தருள் சுந்தரியிமயமலைவந்திடு தருணிதாலேலோ - தண்டமிழளகையினமர்ந்தொளிர் வண்டமராளகவுமையம்பிகை தலைவிதாலேலோ. (அ)

வேறு.

படிமுழுதுந்தரு தாயேதீயேனுயாது - பசார்தருபு ன்சொலு னாலோர்மேலோர்தாலார, கொடிதருமின் சொலு மேவாவோவாதேவாழ - நுவலுறுமஞ்செவியீ வாய்பாவாய்தாவாத, கடிமலர்துன்றிய தாதார்கோதா ய்மாதாவே-ககனம்வணங்கிடு தாளாயாளாய்மீளாத, வ டியவரன்பினிலாழ்வாய் தாலோதாலேலோ - வளகைவ ளம்பதிவாழ்வாய் தாலோதாலேலோ. (௯)

வேறு.

காவுறுகொடியர்வினைதீராய் தாலோதாலேலோ- கடல்வளையுலகுதவுமோராய் தாலோதாலேலோ, பரவு றுமெனதுகவிநாராய் தாலோதாலேலோ - பழவடிய வர்கள்புனைதாராய் தாலோதாலேலோ, விரவுறுகரிய குழல்காராய் தாலோதாலேலோ - விளைபவநலிவலிகொ ள்பேராய் தாலோதாலேலோ, வரவணிபரன்மருவுசீரா ய் தாலோதாலேலோ - வழகியபொழிலளகையூராய் தா லோதாலேலோ. (௧0)

தாலப்பருவ முற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

வளமலிதிரைக்கருந் துகில்புனைந் தொளிருமணி மாசுணச்சூட்டுவைகு - மகளூரத்துறுபுலவ ராண்மை சிரியதெனை மறந்தாவிலாமலுவகை, யுளமலிதரப்பெ ண்மை சிரியதெனப்புகல வுற்றவெண்டிசைகடந்து -

மோங்குமொருசிகரவட வரைவரையெனக்குழையவொ ருநொடியினிற் குழைத்த,குளமலியழற்கட்பிரான் றிண் டடம்புயக் குவடுகெடழீஇக்குழைத்துக் - குறிவைத்து வென்றபிர தாபங்கரச்செம்மை கூர்ந்தழகுவாய்ந்துமி ளிரும், தளமலிசெழும்பங் கயக்கரங்கொண்டம்மை சப் பாணிகொட்டியருளே - தண்ணளகைநண்ணிவளர் வ ண்ணமலிபெண்ணரசி சப்பாணிகொட்டியருளே. (க)

செம்மைமலிபவளச் சரோருகந்தம்மழகு சேரு மாறுள்ளுடைந்து - செறிகணீர்சிந்தியொரு தாளூன்றி வனநின்று செய்தவத்தினுமுறும, லம்மைமலிகண்ட ன்விழி யாயுறுங்கண்டன்முன் னடைதுயரமுனிவிரோ தித் - தடையவுனல்விட்டுத் தமக்கணியணிந்தென்று மருகுறத்தாங்கிநிற் குங்,கொம்மைவரிமென்முலைத் தா க்கணங்கொடுதொடர்பு கொள்ளினவ்வழகெளிதினிற்- கூடலாமென்றகத் துன்னியின்னமுமன்னள் குடிகொ டவிசாய்ச்சுமப்பத், தம்மைநிகராயசெங் கைத்தலங்கொ ண்டம்மை சப்பாணிகொட்டியருளே - தண்ணளகைந ண்ணிவளர் வண்ணமலிபெண்ணரசி சப்பாணிகொட்டி யருளே. (உ)

உழைதரும்பேரொலி முழக்கிற்குவந்தருளு மும் பர்பெருமான்வரிவளை - யூசலாடுஞ்செவிகள் களிதூங் கவிருமுனிவ ரூற்றிசைத்தேன்வெறுப்பக், கழைதரு செழும்பாகு மின்னமுதும்வான்சுரபி கான்றதீம்பாலு

மினிய - கனியிரதமும்மளவி மழலையின்னமுதுங் கலந்துகசியன்பினேடு, பிழைதாலில்வேதசா ரங்களிந்தூற்றெழீஇப் பெருகுசெந்தமிழ்வாக்கிடப் - பிரமபுரம்வரு கவுணியக்குழந்தைக்கினிது பீதவள்ளத்திலேந்தித், தழைதரும்பரஞான வமுதூட்டுசெங்கைகொடு சப்பாணிகொட்டியருளே-தண்ணளகைநண்ணிவளர் வண்ணமலிபெண்ணரசி சப்பாணிகொட்டியருளே. (௩)

குளிர்தவளவருவிசெம் மணிபொன்வரன்றியிழி குவடுபொலிதருவரையினிற் - கூடப்பிறந்துறவு கொளவவாய்நின்றதுங் கூருவகைபெருகவேந்து, மொளிர்முருகவேணுறுங் குஞ்சிகோதிப்புனைய வுரியதாய்நின்றதுமுணர்ந் - தொண்காந்தண்மலரினைத் தோழமைகொளிஇத்தமக்குறுபகைவிளைத்ததன்றி, மிளிருமம்முருகவேளேந்துகரவயிலேவிவிட்டப்பகைத்தவொருமா-மேவுமினமாய்நின்ற மாவின்றதென்னவுள் விளங்கவோர்ந்தத்துணர்ச்செந், தளிர்கவிழ்தலைக்கொள்ள வென்றவங்கையினம்மை சப்பாணிகொட்டியருளே - தண்ணளகைநண்ணிவளர் வண்ணமலிபெண்ணரசி சப்பாணி கொட்டியருளே. (௪)

தேங்குவெண்ணிலவெறிக் குஞ்சிறையனப்பெடை சிறந்ததன்செவ்விவவ்வித் - திகழ்செய்யதாமரைக் குறவுபூண்டதனிற் செழித்துவாழ்தன்மையானு, மோங்குங்கருங்குயிற் பேடுதன்னேடுபகை யுற்றது

ணர்செற்றருதத் - தொருவாதுமருவுதலி ஞனுமவை யொருவிஙின் னெண்ணிறமடைந்துசெவ்வாய்த், தீங்கு தலைமொழியவாய் ஙின்றெம்பிராற்கோர் செழுந்தலத்தி னியநீழல் - செய்யுமருதத்தருவின் வாழ்வதோர்ந்தே பைஞ் சிறைக்கிள்ளையொன்றுமென்றுந், தாங்குறுதி ருக்கரங் கொண்டம்மையம்மையொரு சப்பாணிகொட்டி யருளே - தண்ணளகைநண்ணிவளர் வண்ணமலிபெண் ணரசி சப்பாணிகொட்டியருளே. (ரு)

வேறு.

தீதகமருவலி லாதவரினிதமர் கொச்சைநகர்ப்பா லே - சேயொளியினனிலு மாய்வறவளரு மவிச்சையி ருட்கோரோள், ளாதவனெனவெழு வேதியமகவை யளித்தமுலைப்பாலா - லாரணமுறுபொருள் சார்தமிழ் சொலவயர் விச்சைமறக்காமற், பாதகமலிபவ வேதமு றெனையு மிருத்தவினிப்போவாப் - பாலினுமினியசொ லாலுறுகவிபுகல் விக்கநினைப்பாளே, கோதறுமருமறை யோதுறுமொருமயில் கொட்டுகசப்பாணி - கோபுரமி ளிரள காபுரிவளருமை கொட்டுகசப்பாணி -(சு)

சீர்தருமலர்செறி தார்தருநறுமண மொய்த்தகு ழற்கோதாய் - தேவருமுனிவரர் யாவருமினிது துதித் தகழற்போதாய், நீர்தருபருவம தார்மணமுகையெழில் செற்றமுலைச்சூதாய் - நேர்தருமிழையினை யீர்பகவனவி டையுற்றகலைப்பேதாய்,நார்தருமனவடி யார்விதிமுறை நனி யிட்டமலர்த்தாதாய் - நாமகல்வழியடியாமலர்நினை

தலை விட்டகலர்க்கோதாய்,கூர்தருகருணையினோர்தருவி
ழிமயில் கொட்டுகசப்பாணி - கோபுரமிளிரளகாபுரிவள
ருமை கொட்டுகசப்பாணி. (எ)

வேறு.

ஏடுபடைத்தமலர்த்தவிசிற்பொலி பொற்பாவை
யேர்மலியத்திகழ்நற்கலைமுற்றுணர் சொற்பூவை
தோடுபடைத்தசெவிச்சசிமுற்சுர வைப்பாருந்
தோகையருச்சிகுவித்தகரத்தொடு மொய்த்தார்கள்
காடுபடைத்தசடைப்பரமர்க்கு ளுவப்பேறக்
காமருரத்தில்வடுத்திகழச்செய் மணிப்பூணர்
கோடுபடைத்தமடப்பிடி கொட்டுகசப்பாணி
கோவளகைப்பதியுத்தமிகொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

கடிமலரளகமதெழிலுறவைத்து முடித்தாருங்
கவினுறுநுதன்மணியொளிவிடுசுட்டி தொடுத்தாரும்
வடிவிழியழகுறவெழுதுறுமைச்செறி வித்தாரும்
வளரிளவனமுலைகுளிர்தரமுத்த மமைத்தாருந்
துடியிடையணியொடுசிறுதுகில்சுற்றி விடுத்தாருஞ்
சுலவினர்மகிழ்தரவனசநிகர்த்த கரத்தாலெங்
குடிமுழுதடிமைகொள்பிடிநடைகொட்டுக சப்பாணி
குளமலியளகையில்வளமயில்கொட்டுக சப்பாணி. (கூ)

வேறு.

கத்துகடற்புவிமுற்றருள்சிற்று தரத்தாளே
கட்டறுபத்தருளத்திலினித்த சுவைப்பாகே
யுத்தமவெற்பிறைபெற்றுவளர்த்த தவப்பேறே
யொப்பகல்பச்சைநிறக்கலபத்து மயிற்பேடே

வித்தகமற்றவெனக்குமளிக்கு மருட்டாயே
வித்துருமச்சடையத்தர்பிடித்த கரத்தாலே
கொத்தலர்மொய்த்தகுழற்கொடிகொட்டுக சப்பாணி
குற்றமகற்றளகைக்குயில்கொட்டுக சப்பாணி (க0)

சப்பாணிப்பருவ முற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

---

வேரலரும்புந்தண்ணிலவு விரிவெண்மணியுங்கரியவிருள் - விழுங்குஞ்சுடர்செய்செம்மணியு மிளிருஞ்சிமையவிமையவரைச், சாரலரும்புபசுங்கிளியைத் தளிர்க்கையேந்தவஃததரங் - தன்னைக்கனியென்றங்காந்துதாவுமடமைநவியமலர்த், தாரலரும்புங்கருங்குழற்கைத் தாயரகிலமீன்றவெனைத் - தாயென்ற றியார்மகளெனவே தாங்குமடமைநிகர்க்குமென, மூரலரும்புஞ்செங்கனிவாய் முத்தந்தருகமுத்தமே - முழுமாதவர்கடொழுமளகை முதலேமுத்தந்தருகவே. (க)

பனியாரமுதம்பிலிற்றுகதிர் பரப்புமிளவம்புலியிருக்கப் - படரும்பவளச்சடைக்காடு படைத்துப்பொலிந்துவிளங்குமொரு, நுனியார்தருகோட்டிருகவுண்மா நுகரவொருதிங்கனியளித்து - நுவலுஞ்சைவநன்னெறியினுழையாதுழன்றேயிறுகுமுளங், கனியாவன்பர்க்கறக்கசந்து கனியுமன்பர்க்கின்பநுறுக் - கசியவீனாய்டிக்கனிந்த கண்டங்கறுத்தசெய்யகனி, மூனியாதுவந்தகின்கனி

வாய் முத்தந்தருகமுத்தமே - முழுமாதவர்கடொழும
ளகை முதலேமுத்தந்தருகவே. (உ)

அதிருந்தரங்கப்பெருங்கடலி னகடுபுழுங்கவழன்
றெழுந்த - வாலம்பருகனியுவந்த வையன்றிருவாய்க்
காருவகை, யுதிரும்படியிலின்சுவைய வூறலமுதுமண்ட
மெலா - முகப்பேரொலிசெய்யுழைமுழக்கிற் குவந்தவ
ளையார்திருச்செவிக்குக், கதிரும்பசியசிறைக்கிளியுங் கா
மர்குயிலுநாண்கொள்ளக் - கன்னற்பாகுஞ்செழுந்தே
னுங் கலந்தாலனையவின்மழலை, முதிருமமுதுந்தருங்க
னிவாய் முத்தந்தருகமுத்தமே - முழுமாதவர்கடொழு
மளகை முதலேமுத்தந்தருகவே. (௩)

பூவார்பசுந்தண்டுழாய்ப்படலை புரளுந்தடந்தோட்
கரும்புயலும் - பொற்றூதவிழம்புயவணையிற் பொலிசெ
ம்மலையுமலிதெய்வக், காவார்நிழல்வாழரசுமுதற் கடவு
ட்காடுமற்றெவையுங் - கடைநாளொடுங்கவொடுக்குபெ
ருங் கருணைடபெருக்கார்தருதவளச், சேவார்தெய்வக்க
டல்வணங்காச் சென்னிவணக்கிச்செவிசாய்ப்பச் - செ
யுந்திங்குதலைமழலைகமழ் சிறுபைங்குழவிசெழுமலர்வா
ய், மூவாமுத்தங்கமழ்கனிவாய் முத்தந்தருகமுத்தமே-
முழுமாதவர்கடொழுமளகை முதலேமுத்தந்தருகவே.

பெருகுசலதிநெடுமுரசும் பிகக்காகளமுங்காற்றே
ரும் - பிணங்குதுணங்கறற்கயமும் பிறங்குசிறையஞ்சு
கப்பரியு, மிருகுங்குமக்கோடேந்திநுடங் கிடையாராய

படையுங்கொண் - டெல்லாவுலகும்வயங்கொள்ளு மிக்கு ச்சிலையோன்றனைப்பொடித்த, கருகுமிடற்றோன்றனை வெல்லக் கருதிவேறுசமைத்தமுல்லைக் - கணைகணிறை த்தவாவமெனக் கவினூர்மூரனிறைந்திலங்கு, முருகு மலிசெங்குமுதவாய் முத்தந்தருகமுத்தமே - முழுமா தவர்கடொழுமளகை முதலேமுத்தந்தருகவே. (ரு)

தளைக்குங்கடவுட்கற்பகப்பூர் தாமத்தடந்தோட்ச தமகனும் - தண்ணங்கமலப்பொகுட்டுறையுஞ் சதுமா மறைதேர்முதுமுனியும், வளைக்குஞ்சிலைவாணுதற் றி ருவாழ் மருமத்தவனும்வானவரும் - மாசிலாமெய்யடி யவரும் வந்துவணங்கப்பேரின்பம், விளைக்கும்வினைய மர்ந்தருளும் விமலப்பெருமாற்கென்ஞான்று - மிக்குப் பெருகிப்பேரின்பம் விளையமுறுவல்வெண்ணிலவு, மு ளைக்கும்பவளத்திருவாயான் முத்தந்தருகமுத்தமே- முழுமாதவர்கடொழுமளகை முதலேமுத்தந்தருகவே.

வேறு.

மாமேவுமின்கருங் குழலுமலர்வதனமும் வயங்கு மருள்விழியுமொழியும் - வண்களமுமென்றோளும் வ னமுலையுமஞ்சரண மாமலரும்வெலவுடைந்த, கோமே வுமுகிலுமுழு மதியுமுகண்மீனுங் குறுங்கட்கரும்புநீரு ட் - குலவுவளையுங்கழையும் வேழவெண்மருப்புங் கு சேசயமுமுதவுமுத்தர், தாமேவுமணிமுத்த மாயினு மியாங்கோளேங் தோலெலும்புஞ்சின்னமாத் - தோன் றவணிதுணைவனென வேசின்னமாகத் தொடுத்துநீ

யேயணிந்தப்,பாமேவுவிளையடி வாழ்பரனவாவுநின் ப
வளவாய்முத்தமருளே - பங்கயம்விராவுமிரு மங்கைய
ர்பராவரசி பவளவாய்முத்தமருளே. (எ)

சேல்பெருகுதண்புனற் பாகிரதிச்சடைச்சிவபிரா
னமுதிரந்த - சிறுபுலிக்குருளைவயி னுறுபெருந்தீப்பசி
தெறக்கூயழைத்தூட்டிய, மால்பெருகுபாற்கடற் பள்
ளியையிழந்ததுயர் மாறுதுழன்றதந்தை - மகிழ்தூங்க
வுன்னியவன் முன்னேன்பெருங்காவன் மருவுதிணையி
ன்கணிகமர், தால்பெருகுசுதனக் கடற்பள்ளிபற்பல ச
மைத்தெனக்கயவாய்ப்பெருந் - தடமருப்பெருமையிள
நாகுன்னிமடிநின்று தணவாதுபொழிதருந்திம், பால்
பெருகுகுளமருவு வளமருவுமளகைமயில் பவளவாய்மு
த்தமருளே - பங்கயம்விராவுமிரு மங்கையர்பராவரசி ப
வளவாய்முத்தமருளே. (அ)

வேறு.

அறையுநிறையுநதியுமதிய மரவும்விரவுமத்தமு
மலருமிதழிமலருமுடியி லணியுமிறையிடத்துமா
மறையின்முடியுநசையுமுனிவு மயலுநனிசெழித்துற
வளருமிழிவுமலியெனுளமு மருவியுறையுமுத்தமி
ழறையுமதுவுமுறுநன்மலரி னனிசெயடியருச்சனை
நவிலுமினியதுதியுளுருகு நலமுமொருவில்பத்தியே
நிறையுமடியர்பிறவிகளைய நினைவடருகமுத்தமே
நிலவுபுரிசைசுலவுமளகை நிமலிதருகமுத்தமே. (௯)

வேறு.

காரார ளகமதியேரார்வதனமருளைச்சொரி
காதார்விழிதரளமோதாவொளிருநகைதுப்பினு
நேராவிதழ்சலதியூராவளைகசர்சுபக்களம்
நீடார்பசுமுளையைநாடாவெலுமிளமணிப்புயர்
தாரார்களபமுலைநீராரகிலமருடுத்தமுட்
டாளார்வனசமலர்வாளார்சரணமெழிலைத்தரத்
தேரார்தருமளகை யூராருமையருள்கமுத்தமே
தேனார்மலர்வதியுமானா ரரசருள்கமுத்தமே. (௧௦)

முத்தப்பருவ முற்றிற்று.

---

## வருகைப்பருவம்.

---

மாமலர்நறுந்தெரியல் சூழ்கருங்குழலிடை வயங்குதாளங்குயிற்று - வண்பிறைவதிந்துநில வின்றுகருமுகிலிடை வயங்குவான்பிறையெழிறாத், தூமலர்பெருங்கருணை வெள்ளப்பெருக்கெழத் தோற்றுகட்கடலிடையிரு - சுடரிரவிதோன்றியயல் வாழ்ந்தெனமணிக்குழை துணைச்செவியினிளவெயில்விடத், தேமலர்ச்சலசமுக மலரவிளமுறுவலஞ் செங்குமுதமலர்வாயெழத் - திருவிடையின்மேகலை யொலிப்பவங்கனகச் சிலம்புகள்கலின்கலினெனப், பாமலர்புகழ்த்திரு வடித்துணைபெயர்த்தெழிற் பரமநாயகிவருகவே - பளகையோவிய சந்த வளகைமேவியவந்த பனிமலைக்கொடிவருகவே. ()

விண்ணுலவுதண்மதிக் குழவிதவழ்தருகுடில் விரைமூலத்தமர்ந்த - விமலனருள்ளமொன் றேபகலையிரவினைவிளக்கும்விழியுந்தொடரநீள், கண்ணுலவுகன்னலடு பாகனையதேமொழிக் கலைமகளுமிலகுகஞ்சக்-கனகமனைகுடிபுகுது மலைமகளுநின்செழுங் கரமலர்சுமந்துதொடரத், தண்ணுலவுநறுமலர்க் கரியகுழல்வெண்ணிலவு தவழுமுறுவற்செய்யவாய்ச் - சசிமுதற்றெய்வமடமாதர்கூப்பியகரந் தலைமேற்சுமந்துதொடரப், பண்ணுலவுமறையா யிரந்தொடரவளரொழிற் பரமநாயகிவருகவே - பளகையோவியசந்த வளகைமேவியவந்த பனிமலைக்கொடிவருகவே. (உ)

தவளக்குருகினில வெறிக்குமென்சிறையனந் தமனியமணிச்சிலம்பிற் - றழைகுரலுமடநடையு மடைதரவிரும்பியுஞ் சதுமறைபயின்றவன்னங், கவளக்கடாக்கரி யுரிப்படாம்புனைபரன் கங்கைமுடிநேடிப்புகூஉக் - காணுதுமீண்டுமா ணுதபேரிழிவுதங் கவினுர்குலப்பெருஞ்சீர், துவளப்பெருக்கியது மாற்றுவா னுன்னியச்சுடர்முடியறிந்ததனில்வாழ் - சுரநதிதுளைந்தநின் மெல்லடிபெயர்த்திடுந் தொறுமறியவுந்தொடரவம், பவளச்செவ்வாய்வெண் ணகைக்கருங்குழலெழிற் பரமநாயகிவருகவே - பளகையோவியசந்த வளகைமேவியவந்த பனிமலைக்கொடிவருகவே, (௩)

நீடுபலவேய்த்திர ளுகுத்தபன்மணித்தரள நிலவுகான்றிருளைமேயு - நெடுமுடிச்சிகரவரை யிற்பிறந்துங்

கூடி நிலவவிளையாட்டயர்ந்து, மாடுமணிவேல்கரந் தா
ங்கியசுரக்கிளையு மமரர்கட்குறுமுறுகணு - மடியறக்கா
ய்ந்தவொரு மழவிளஞ்சேய்தன்னை யமையச்சுமந்துல
வியுங், கூடுநினைநோர்ந்துநின் சாயனடையானுற்ற குறை
வுதீர்ப்பானுனியவை - கூட்டுணவவாவிப் பசுந்தோகை
மஞ்ஞைக் குழாங்கூடிவரநாயினேன், பாடுகவியும்புனை
நின் மெல்லடிபெயர்த்தெழிற் பரமநாயகிவருகவே - ப
ளகையோவியசந்த வளகைமேவியவந்த பனிமலைக்கொ
டிவருகவே. (சு)

அலர்செய்யநறுமலர் கரந்தாங்கிவந்தடி யருச்சனை
புரிந்துவிழிநீ - ரருவிபெருகக்குழைந் துள்ளுருகிநன்னு
வ கந்தமும்பத்துதிக்கும், வலர்நிலவுசுசியுளக் கோயிலு
க்கேற்றிய மணித்திபமேநிறைம - மறவியினுநவிலாது
கொடியபன்னெடுநிரைய் வாழ்க்கையாய்க்கழிமுருட்டுக்,
கலரகத்திருளாய்க் கரந்தவிருளேநுதற் கண்ணுடைக்க
ற்பகத்தின்- காமரொருபாற்படர்ந் தேறுபைங்கொடியே
கவின்றமாலயன்முன்வானோர், பலர்சுலவியேத்தநின் ம
லரடிபெயர்த்தெழிற் பரமநாயகிவருகவே - பளகையோ
வியசந்தவளகைமேவியவந்தபனிமலைக்கொடிவருகவே.

வேறு.

தளங்கூர்சலசமலர்மனைவாழ் தருபூந்திருவினுரு
வமைந்த- தங்கையனையமங்கையர்க டயங்கும்வியங்கொ
ளரமியத்தி, லுளங்கூருவகைபெருகவமர்ந் துலவாக்கா
தற்றோழியர்த -முறுபூங்குழற்குநறுந்தகர மொழுக்கி

யிழுக்கின்மலர்வேய்ந்து, சளங்கூர்விழிக்கஞ்சனந்திட்டி க் கதிர்மாமுலைக்குத்தொய்யில்வரை - காலைக்கணவருகி ர்வடுவைக் காணநாணித்தலைவணக்கும், வளங்கூரள கைவிளங்குபெரு வாழ்வேவருகவருகவே - வானோர்தெ ய்வமாதர்சிகா மணியேவருகவருகவே. (௬)

வணங்கொள்பசியவிளந்தோகை மயிலஞ்சாயலயி ல்விழிமேன் - மாதராருந்தாதளவு மாலைத்தடந்தோட் காளையருங், குணங்கொள்காதற்கடலகத்துக் குளித்து க்களித்துக்கலவிநலங் - குலவநுகருமாளிகையுங் குளிர் மேனிலையுமொளிர்மணியின், கணங்கொளரமியத்தலமு ங் கவின்றவனையரணிந்தநறுங் - கலவைச்சேறுநிலவும லர்க் கணியுங்கிடந்துநனிவிளைக்கு, மணங்கொளளகை யிண்கு பெரு வாழ்வேவருகவருகவே - வானோர்தெய் வமாதர்சிகா மணியேவருகவருகவே. (எ)

நண்ணுஞ்சுடர்செய்செம்மணிக ணன்குகுயிற்றி யிருட்குவையை - நக்கப்புரிந்தமாளிகையி னருமேனி லையினிலாமணியாற், பண்ணுந்தசும்புநிரையுமொளி பர வுமரமியத்தலமும் - பாய்செய்குன்றப்பரப்புமலர்ப் பக ழிமதவேணிகரிளைஞர், கண்ணுமனமுங்கவருமெழிற் க ளபமுலையார்வதனமதி - கண்டுகான்றபுனல்பெருகிக் க டுங்காறுறுத்தமாசகல, மண்ணுமளகைநண்ணுபெரு வாழ்வேவருகவருகவே- வானோர்தெய்வமாதர்சிகா மணி யேவருகவருகவே. (அ)

திருந்தார்புரநீறெழச்சற்றே சிரித்தபெருமான்மு டியிதழிச்- செந்தாதளையவம்முடியிற் செழுநீர்த்துறை யிற்சுழுவுறுமின், னருந்தாமரைமெல்லடியருமை யறிந் தேம்புழுதியளையாம - லம்பொற்றகடுபுவிபடுத்தே மா ய்ந்துபரப்புமலருறுத்தி, வருந்தாவகைமென்றுகில்விரி த்தேம் வயங்குமதுமின்னடியருள - மானக்குளிர்ந்து மெத்தென்று மலிநலினிமைசெயுந்தெவிட்டா, மருந்தா யளகையிருந்தபெரு வாழ்வேவருகவருகவே -- வானோர் தெய்வமாதர்சிகா மணியேவருகவருகவே. (௯)

திருவேவருகதெவிட்டாத தேனேவருகவின்னமு தத் - தெளிவேவருகபேரின்பச் செறிவேவருகவோர்சு மந்த, வுருவேவருகபரஞான வொளியேவருகவருமறை யி - னுவப்பேவருகவனைத்துயிர்க்கு முயிரோவருககதிய ளிக்குந், தருவேவருகவுலகீன்ற தாயேவருகநாயேற்கு ந் - தஞ்சேவருகபரனணியுந் தாரோவருககாரிவரு, மரு வேய்பொழில்சூழெழிலளகை வாழ்வேவருகவருகவே - வானோர்தெய்வமாதர்சிகா மணியேவருகவருகவே. (௧0)

வருகைப்பருவ முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

---

மணியாரமல்குவளை யமைவனங்களிறரவ மாலரி த்திரள்குலாவி - வானுறுபாய்தலைய வாவியபிறங்கலை வாய்ப்புறத்தோன்றுதிறனூற், பணியாரநிலவுறு பசுங்க

திர்வயங்குருப் பண்பமைதரக்கோடலாற் - படர்செந்து கிர்க்குடில வெம்பிரானெழிலுருப் பாதிகொண்டுறமே வலா, னணியர்ரவான்வெங் குருப்புலவரமிர்துகொள நன்றருளிசின்றமையினு - னுடுநின்செய்கைதன் செய் கைநிகராமெனை நயந்தாடநினைவிளித்தா, ளணியாடகப் புரிசை சுலவளகையம்மையுட னம்புலியாடவாவே - ய ருளுருசிரம்பியெழி லமையுமுமையம்பிகையொ டம்பு லியாடவாவே. (க)

வானமருமாதரின் சொன்மதுப்பொழிசெய்ய வா ய்க்குமுதமலர்திறக்க - வண்டணிகொண்முண்டகங் கு வியவானந்தமா வாரியினிடைத்தோன்றினுய், கூனம ரும்வாணுதல்வள் ளிக்குநாயகனுளங் கோடாமகிழ்ச்சி செய்தாய் - கூறுமானேந்தியாய்க் குலவரனிடக்கணுய்க் குடிகொண்டுவாழ்வுவந்தாய், மீனமர்கணம்மாதர் பு டைசூழமேவினுய் விழையுயிர்ப்பயிர்தழையருள் - விசி னுயாகலா னியெம்பிராட்டியை விளங்கவொவ்வாதிராய் வின், ஞனமர்கொடிப்புரிசை சூழளகையம்மையுட ன ம்புலியாடவாவே - யருளுருசிரம்பியெழி லமையுமுமை யம்பிகையொ டம்புலியாடவாவே. (உ)

ஒளிதங்குகலைகளொவ் வொன்ருகவுறுவையவை யுன்னிலிரொட்டேயிவ - ளொருங்குற்றகலைகளெட் டெ ட்டோவலாதவையு ளொன்றுமில்லாதுகுறைவாய், களி தங்குபுலவனென் கான்முளையுளாயவன் காணுமொரு

முகனேயிவள் - கான்முளைபெரும்புலவனறுமுகவனே
வலது கற்பத்துமாயாதிரான், வெளிதங்குமிருள்வீட்டு
வாயதுவுமொன்றிவள் வீட்டுமும்மலவிருட்டோ - மீட்
டுமஃதுறுமென்னி னீயிவட்கொப்பென விளம்பலெங்
ஙனநவிலுவா, யளிதங்குமலர்துன்று பொழிலளகைய
ம்மையுட னம்புலீயாடவாவே - யருளுருநிரம்பியெழி
லமையுமுமையம்பிகையொ டம்புலீயாடவாவே. (௩)

இலங்குகதிர்வீசிப் புறத்திருளகற்றியெழு மிரவி
முனமொளியிலாய்நீ - யெதிரிலருள்வீசியக விருடொலை
த்தெழுஞான விரவிமுன்னிவளொளியுளாள், கலங்குநி
லையுடையனுய்த் தலையொன்றுமுளபாந்தள் கண்டுநனி
யஞ்சுவாய்நீ- கறையுறுமுழுப்பாந்தள் பலவணிந்தவனி
டங் காணிகொண்டிவளஞ்சுறு, டுலங்குங்களங்கனீ யக
ளங்கியிவளெனச் சொல்லுமறைநீயுமுணர்வாய் - தாய
விவளுக்குநீ நிகரல்லையென்றொருவர் சொல்லவும்வே
ண்டுங்கொலோ, வலங்குமணிமாடநிரை திகழளகைய
ம்மையுட னம்புலீயாடவாவே - யருளுருநிரம்பியெழில
மையுமுமையம்பிகையொ டம்புலீயாடவாவே. (௪)

பாடுசான்மறைமுடிவி னுறும்வீரசேகரப் பரமர்
க்குநீயவையவம் - பலவற்றினுஞ்சிறந் தோங்குமருள்
விழிகளுட் பன்னுமோர்விழியாகியும், பீடுசாலனையர்பு
னை பலவாயவணிகளுட் பேணுதலையணியாகியும்- பேசு
முருவெட்டுளோ ரமுதவுருவாயும் பிறங்குகுணமேநி

லைந்து, தேடுபேரிழிவொன் றுநினையாமலருள்விழி சி றக்கவாவென்றழைத்த - திறமுன்னிலவள்பெருந் தன் மையொன்றேநின் செழுந்தவப்பேறுமதுகா, ணுடுகே தனமாட மொளிரளகையம்மையுட னம்புலியாடவா வே - யருளுருநிரம்பியெழி லமையுமுமையம்பிகையொ டம்புலியாடவாவே. (௫)

தண்ணியதடந்திரை சுருட்டுறுநெடும்பயோ ததி யின்கனிினியவமுதந் - தாக்கணங்கிருநிதி யொடுந்தோ ன்றிவிளைமாத் தருவடிமுளைத்தவெங்கள், புண்ணியப் பெருமான் புனைந்தநிறென்னப் பொலிந்தவன்றிருமுடி க்கட் - பொங்குகங்கையின்மூழ்கி வாழ்பெரும்பேற்றொ டப் பூரணத்காவியனைய, பண்ணியலுமின்சொற் பிராட் டிபாலின்னருட் பாக்கியமுமடைவையாயிற் - பகர்நினக் கிணையாவ ரஃதடையுமமையமிது பாணித்தலழகிதன் று, லண்ணியபெருஞ்செல்வ மலியளகையம்மையுட னம்புலியாடவாவே - யருளுருநிரம்பியெழி லமையுமுமை யம்பிகையொ டம்புலியாடவாவே. (௬)

நிறங்குலவுகருமுகில் விளர்ப்பவிருளுறுமேனி நெ டியமான்முதலமரரு - நிறைதவத்துயருமா முனிவரரு மடியரு நெருங்குசந்நிதியடைந்தோர், கறங்குலவுகொ டுவெந் துயர்ப்பிறவியாயவான் கடலகடந்தின்பவெள்ள க் - கடன்மூழ்கியென் றுந் திளைக்கவருள்புரிபெருங் கரு ணைநாயகிதிருமுனர், மறங்குலவுகயரோக முங்குரவன்

மனைதழுவு மாபாவமுஞ்சாபமும் - வருதியேன்மாயுமி
துண்மையாகவிலலென் மதிக்கடவுளநியாய்கொலோ,
வறங்குலவுமனையாய வணியளகையம்மையுட னம்புலி
யாடவாவே - யருளுருபிரம்பியெழி லமையுமுமையம்
பிகையோ டம்புலியாடவாவே. (எ)

மலரடியடைந்துவழிபடுமுறையின்வழுவாதுவழி
பட்டுநிற்குமடியார்-மலமாயைகன்மங் குமைத்துச்சிவா
னந்த வாரியிற்புகவிடுமிவள், பலர்புகழும்வள்ளன்மை
நிற்கவொருகால்வந்து பார்த்தவர்வினைக்காட்டினிற் -
பற்றிநுண்டுகள்படப் புரிநெருப்பெனவுலகு பன்னநி
ருருவாய்ப்பொலி, கலரணுகுருதசத் தியநிர்த்தமொன்
றிவண் கவினுமதன்மான்மியம்யாங் - களயவரிதகின்
மூழ்கி னிபெறும்பேறுமோ களயவரிதிருசத்திய, மல
ர்தருமதுப்பெருகு பொழிலளகையம்மையுட னம்புலி
யாடவாவே - யருளுருபிரம்பியெழி லமையுமுமையம்பி
கையோ டம்புலியாடவாவே. (அ)

காரணவுமேனிநெடு மான்முதற்பலகோடி ககன
வாணர்கணிரைநிரை - கரங்கூப்பிமுடிமிசை யருட்பெரு
க்கேறுகட் கடைநோக்கநோக்கிநிற்பச், சிரணவுமவரை
யழை யாதுவாவென்றனைத் தேர்ந்தழைத்திடுபேரரு
ட்-டிறமுணர்வினிகலை மதிக்கடவுளென்றவனி செப்பு
மொருபேரிழந்தா, யேரணவுபரன்முடி யிருப்புமோ
சிறுபலவி யெய்திடினிழத்தலிண்ண - மிவளைமதியாது

சிறு விதிதந்தையாயுமவ னெய்துறுகணுலகறியுமே, யாரணமுழக்கமலி யாவளகையம்மையுட னம்புலியா டவாவே - யருளுருநிரம்பியெழி லமையுமுமையம்பிகை யொ டம்புலியாடவாவே. (௯)

வாராயெனக்கடிது வாராமைகண்டன்னை மலர்வி ழிகள்சேப்பநோக்கி - வந்ததுபெருங்கே டுனக்கென்றி யாமஞ்சி வாய்வெரீஇநின்றன்னைநின், காரார்குழற்பின் னலைக்கரும்பாம்பெனக் கருதியச்சுற்றுநின்றான் - கடி தணைவனினிமுனிவு றேலென்றுவேண்டியக் கண்சிவப் பாற்றினேம், தோராதினுந்திரிதி யேலுனைமுனந்தே ய்த்த வும்பர்பெருமானுமுனியு - முவன்முனிவுறிற்றடு த் திடவல்லமல்லமிஃ தோர்ந்துணர்திசற்றனைப்பின், பாராதரிக்கவல் லார்ளகையம்மையுட னம்புலியாடவா வே - யருளுருநிரம்பியெழி லமையுமுமையம்பிகையொ டம்புலியாடவாவே. (௰)

அம்புலிப்பருவ முற்றிற்று.

---

## அம்மானைப்பருவம்.

ஓதரியபல்லறங் குடிகொண்மனையாகியொரு வா துறையுநின்கரங்க - ளுறுதமக்கெழில்செய்பல வணிகளு மெடுத்தணிந் துலவாதவன்புபூண்டு, நிதகலுமடியார்க ட் கருள்புரியவுன்னிநீ செல்பொழுதுதமையிரண்டு - செங்கரங்கொடுதாங்கி வருமாதரிருவர்கள் செழித்து

வாழில்லமாய, தாதலருமிருமிறத் தாமரையடைத்திடுந் தண்மதிதனைப்பிடித்துத் - தகர்தரவிடித்துண்டை செய்துமேலெறிதரூந் தன்மையெனவன்மைபூண்ட, வாதரூனுகாவளகை யம்மைதவளத்தரள வம்மானையாடியருளே - யருள்வாரிதிக்கினிய வமுதாவுதித்தவுமை யம்மானையாடியருளே. (௧)

கடியார்மணிச்சூட கஞ்செறிந்திலகுமொளி கஞலுநின்கைத்தலத்தைக் - கண்டுகவினுர்செவ் விதழ்ச்சலசமனையெனக் கருதிமிளிர்பருதிப்பிரான், வடியாதகாதற் பெருக்கெழுந்தலையெறிய மருவிமதியோடுதானும் - வளரொளிமழுங்கிட மறைத்தலைமுனம்புரிகை மலரிதுவெனத்தெரிந்து, முடியாதவச்சுற்று வானெழுந்திடனிகர முதிருமன்புப்பெருக்கின் - முழுகுதனிகர்ப்பவிழி பொழியருவியிடைமுழுகி முன்னின்றுதுதிமுழக்கும், அடியார்குலாவளகை யம்மைசெம்மாணிக்க வம்மானையாடியருளே - யருள்வாரிதிக்கினிய வமுதாவுதித்தவுமை யம்மானையாடியருளே. (௨)

ஏடகமலர்ச்சரோ ருகவாவிதோறுமீ னிரைதேர்ந்துகிரியெகினமு-மிழிவுபெறுகோம்பிகண் டஞ்சுமயிலுங்குயிலு மேமாறவானந்தமா, நாடகமணிப்பொதுவினிற்புரிபிரானுள்ள நளினபீடத்துமேவு-நங்கைநீசெங்கனக வள்ளத்தினமுதொடு நறுஞ்சுவைக்கனியுமூட்டிச்' சூடகமலர்க்கரத் தேந்திமறைமுடிவினைத் தோன்றப்ப

யிற்றப்பெறு-துணையில்பேறுன்னிநின்கைப்பைஞ்சிறை க்கிள்ளை துள்ளிக்குதித்தனிகர, வாடகவெழிற்புரிசை யளகைமயில்மரகதத் தம்மானையாடியருளே-யருள்வாரி திக்கினிய வமுதாவுதித்தவுமை யம்மானையாடியருளே.

மருண்மலியகத்தங்க சன்கரத்தனுவினை வளைக்கு நாளுயமர்ந்த - வண்டினம்பண்டுநுதல் விழியாற்கரிந் தமை மதித்துமற்றையவண்டினங், கருண்மலிநறுங்கு ழற் பெருமாட்டிநின்மலர்க் கணைகோத்தவிக்குவில்லைக்- கவினுறவளைக்குநாளுகப்பொருந்தியக் கண்ணுதலைவெ லலாமெனப், பொருண்மலியறம்பல வளர்த்தகரமலரை ப் புரிந்துவேண்டிடவுன்னியே - போர்தமயமில்லாமை யானிங்கிமீட்டும் புகுந்திடல்கடுப்பவுலவா, வருண்மலி முகத்தளகையம்மைநிலங்குயிற்றம்மானையாடியருளே- யருள்வாரிதிக்கினிய வமுதாவுதித்தவுமை யம்மானையா டியருளே. (௪)

துண்டப்பிறைக்கொழுந்தொளிர்செஞ்சடாடவித் துணைவனூர்திரிபுரங்கள் - சுடுசெஞ்சிகைத்தழற் குணை வாக்குஞான்றுமை தொடவுருக்குழைவுற்றதுஞ், செ ண்டடப்பெருந்தகைச் செழியர்குலவாழ்விற் சிறந்தவொ ருசேய்கைக்கோடு - சினமிக்கொளப்புடைத் திடவலியு டைந்ததூஉ சேர்தரமறந்தநீல, கண்டப்பிரான்கரக் குடையாமலச்செழுங் கான்முளைக்கமுதருத்திக் - கவி ஞர்நின்முலைகிக ரெனுங்கனகவெற்பைக் கனன்றுபலவு

ண்டையாக்கி, யண்டப்புறத்தெறிதல் போலளகையம் மைபொன் னம்மானையாடியருளே - யருள்வாரிதிக்கினி ய வமுதாவுதித்தவுமை யம்மானையாடியருளே. (ரு)

வேறு.

கதிருஞ்சுடர்செய்செம்மணிகள் கருகுமிருளைப்ப ருகநனி - கால்யாத்தமைத்துவிளங்குபெருங் கனகமாட ந்தொறும்பசிய, வெதிருங்கழையும்புரையுமென்றேண் மின்னனாைவின்மதனும் - வெள்கவனப்புவாய்ந்தசுடர் வேற்கையிளைஞருள்ளுவகை, முதிருமாறுபுரிமணத்தி ன் முழக்குமுரசவொலிதிரையார்-முந்நீர்முழக்குமோ சேமு முகிலின்முழக்குமவிதருமா, றெதிருமளகாபுரி க்கரசி யெடுத்தாடுகபொன்னம்மனையே - யிருக்குமுடி யிலிருக்குமுமை யெடுத்தாடுகபொன்னம்மனையே.(சு)

கறங்குதிரைகள்வயிறுளைந்து கமஞ்சூற்சங்கம்பொ றையுயிர்த்த - கதிர்முத்தெறியுங்கடற்புனல கடுவிங்கி டவுண்கார்முகில்வந், துறங்குகனகமணிமாடத் தும்பர் த்தலம்விண்ணுறநிவப்புற் - றொளிர்தலாலங்கிலங்கும ணி யூசலாடிக்காசில்கதிர், பிறங்குதரளப்பந்தாடும் பே தைமாதருடனுடல் - பேணியவ்விண்ணமர்தெய்வப் பி ணக்களுயர்சோபானவழி, யிறங்குமளகாபுரிக்கரசி யெ டுத்தாடுகபொன்னம்மனையே - யிருக்குமுடியிலிருக்கு முமை யெடுத்தாடுகபொன்னம்மனையே. (எ)

நாறுங்கமலமலர்ப்பொகுட்டு ணண்ணியிருக்கும்பு ண்ணியனே - நகுபல்லுருக்கொண்டிருந்தனைய நலமாம

றையோரிருப்பும்விறல், வீறும்போரொன் றிடிற்பொருப
பும் வெள்கவிங்குதடநெடுந்தோள் - வேந்தரிருப்புங்கு
ற்றேவல் விழைந்துகொள்ளநிதிக்கோனைக், கூறுமடி
மைகொள்ளுமிளங் கோக்களிருப்புமிளையான்றன் - கு
டிமாறனைநேர்வேளாளர் குடியுந்துவன்றலால்வளமிக்,
கேறுமளகாபுரிக்கரசி யெடுத்தாடுகபொன் னம்மனையே-
யிருக்குமுடியிலிருக்குமுமை யெடுத்தாடுகபொன்னம்
மனையே. (அ)

திட்டும்புகழ்சால்பெரும்புகலி செய்புண்ணியமே
திரண்டனைய - தெய்வச்சைவக்குழந்தைமலர்த் திருவா
யமுதுமமண்கைய, ரூட்டும்விடஞ்சேர்பாலடிசி லுண்ட
வரசின்வாயமுது - மும்பர்பெருமான்றோழமைகொண்
டுவந்தபிரான்செவ்வாயமுதும், வாட்டும்பிறவிமருந்தா
ய வாதவூர்க்கோன்வாயமுது - மலியப்புலவர்செவியூட்டி
வந்தோர்தமக்குஞ்சிவதரும, மீட்டுமளகாபுரிக்கரசி யெ
டுத்தாடுகபொன்னம்மனையே - யிருக்குமுடியிலிருக்கு
முமை யெடுத்தாடுகபொன்னம்மனையே. (௯)

கூடார்புரங்களெரிகதுவக் கொளுத்தும்பெருமான்
றிருநயனங் - குளிரமுகந்துண்ணமுகுகனி கொம்பேநம்
புசிரடியார், பிடார்திருவுள்ளத்தடத்துப் பிறங்கமுளை
த்தின்னருண்மலர்ந்து - பேணும்பரமானந்தநறும் பிர
சமொழுக்கும்பசுங்கொடியே, தோடார்மென்பூங்குழன்
மேனைத் தூயதாயின்மடியிருந்து - தோள்வேயேறிவி

ளையாடுந் தோகைமயிலேபலவளஞ்சார்ந், திடாரளகா புரிக்கரசி யெடுத்தாடுகபொன்னம்மனையே - யிருக்கு முடியிலிருக்குமுமை யெடுத்தாடுகபொன்னம்மனையே.

அம்மானைப்பருவ முற்றிற்று.

---

## நீராடற்பருவம்.

பண்பூத்தவரிமிடற் றறுகாலுழக்கவிரி பவளச்ச ரோருகத்திற் - பரமேட்டிவெண்டலைப் படலைநடுவட் பொலிபனித்துண்டநிலவெறிப்பத், தண்பூத்தநீர்த்தலை சுமந்தபெருமானெனத் தண்ணிலவுகாலவீன்ற - தரள மணிநடுவட் பொலிந்திலகுசுரிமுகச் சங்கநீர்த்தலைசுமந் து, கண்பூத்தபேரருட் பெருமாட்டிநின்பெருங் கவினூர் ந்ததிருமேனிதன் - கட்கலப்புறவவாய் நின்றுநீமாறெ னக் கருதுறுங்கங்கையாய, விண்பூத்தநதியெள்ளி வரு பெருந்தேனூற்று வெள்ளநீராடியருளே - வீனாமாவன முறையுமேனாமேவனநிறையும் வெள்ளநீராடியருளே.

வனாசெறிபசுங்கழை யுகுத்தவெண்ணித்திலமு மாமணித்திரளுங்கவுண் - மடைதிறந்தூற்றுமத மால் களிற்றுலவையும் வளர்காழகிற்றுணிகளுங், கனாசெறி நாத்திளாக் கைக்கொண்டுவீசலங் கருணைப்பிராட்டிநி தன் - கட்குடைந்தாடப் பெயர்த்துவைத்திடுபாத கா ணிக்கைவைத்தலேய்ப்ப, வுனாசெறியுமம்மல ரடிப்பெ ருமையோர்ந்தவை யுறுத்தாமலினிமைசெய்ய - வொண்

மலர்ப்பூம்பாய் விரித்திடல்கடுப்பநறை யொழுகுபன்மல ரும்வாரி, விரைசெறியவிசிப் பரப்பிவருதேனுற்று வெள்ளநீராடியருளே - விரை மாவனமுறையு மேனைமேவனசிறையும் வெள்ளநீராடியருளே. (உ)

மன்னுபூங்கமலஞ் சுமந்துதிசைமுகமேய்ந்து மலருநால்வாயொடெண்கை - மருவியோதிமமேற்கொ டோர்ந்துபல்லுயிர்களும்வயங்குற் றுமலியவாக்கி, யுன்னுபொன்னைப்புணர்ந்தொளிர்மணிதரித்தவனி யுண்டுவட்புறவிளங்கி - யோங்குவளைநேமிதண் டார்வாள்பெருஞ்சிலையுவந்துபாம்பணைகிடந்து, துன்னுபேரரவம் புனைந்துமானேந்தியுயர் - தூயவுள்ளம்புகுந்து - துகளில்பரசேற்றவி டற்கருமைவாய்ந்துவான் சுரநதியொடுங்கலந்து, மின்னுபுகழ்மூவரை நிகர்த்துவருதேனுற்று வெள்ளநீராடியருளே - விரை மாவனமுறையு மேனைமேவனசிறையும் வெள்ளநீராடியருளே. (ங)

ஓங்குபொன்னுலகத் திலங்குகற்பகநிழலுவந்தரசுவீற்றிருக்கு - மும்பர்வேந்தன்கடவுளூர்திமுகிலாற்றனக் குறுவளமலித்ததோர்ந்து, தேங்குதான்புரியுமெதிருதவியெனவன்ன வன்றிணைவளம்பெருகுமாறு-செங்கேலங்கன்னல்பைங் கூன்குலைக்காய்க்கதலி தெங்குகமுகெங்குமாக்கித், தாங்குபேரணியுற வியற்றியிருநிதிபல சமைத்தெனச்சங்கந்தொறும்- தாமரைதொறுந்தரள நீலமாணிக்கமணி தமனியநிரம்பவீசி, வீங்குபேரா

லிகான்று வருபெருந்தேனுற்று வெள்ளநீராடியருளே-வீணாமாவனமுறைய மேனாமேவனநிறையும் வெள்ள நீராடியருளே. (ச)

பாவுபெருமாட்டிநின் புகழ்நிகரவொருவயிற் பணிலங்களீன்றதரளப் - பருமணிகள்கான்றவெள் ளொளியினனிதவளம் படைத்துப்பொலிந்தொருவயி, னூவுசெறிநின்பெரும் பிரதாபநிகரவோ ருருளைவையத்துலாவு - மொண்கதிர்சமழ்ப்பவிரி செம்மணிச்சுடர்பரந் தொள்ளொளிச்செம்மைவாய்ந்து, காவுசெறியாவன்புளம்பெருகுறப்பெருகு கண்ணருவிமுழுகுமடியார்-களித்துத்திளைத்தா டிடப்பெருகுநின்பெருங கருணைநிகரப்பெருகிநின், விரவுதுகிநிகர்தர முழுங்கிவருதேனுற்று வெள்ளநீராடியருளே, வீணாமாவனமுறைய மேனாமேவனநிறையும் வெள்ளநீராடியருளே. (ரு)

வேறு.

மருவுமதுவுமலிமலர்த்தார் வனையவருவார்வரவியமன் - வரவென்றுன்னிடுங்குசிறு மருங்குலொசிந்துநனிவருந்தி, வெருவுமாறுபுடைபரந்து வீங்குமுலையார்புலந்துதைப்ப-மேவுமலத்தகச்சுவடு விழையுமகிழ்நர்சிரத்துறுத, லுருவுநலனுமலியவர்தா ளுரோமமுறுத்தப்பொறுதுபுலந் - துதைக்குந்தோறுமினிமைசெய லுன்னிக்கமலத்தளமணிதல்,பொருவுமளகைப்பெருமாட்டி புதுநீராடியருளுகவே - பொன்னூர்த்தெறியுமநநிப்பூம் புதுநீராடியருளுகவே. (சா)

கொங்குவிரியவேடவிழ்த்துக் குளிர்தேனெழுக்கு மலர்வாவிக்-குருஉப்பொற்கமலப்பொகுட்டுநிலாக் கொழிக்குஞ்சிறையோதிமமமர்தல், சங்குகிடந்துபுலம்புறு நின் றளிர்மென்கரத்திற்பச்சொளியே - தழைக்குஞ்சிறைமென் கிளியமர்ந்து தயங்கப்பெற்ற பெரும்பேற்றை, மங்குறுந்தானுமுற மதித்துச்செந்திருவேவணுற-வந்திந்துமாறுப்பெருந்தவத்தை வயங்கப்புரிதன்மானுமவளம், பொங்குமளகைப்பெருமாட்டி புதுநீராடியருளுகவே - பொன்னார்த்தெறியுமதுநதிப்பூம் புதுநீராடியருளுகவே. (எ)

வில்லுங்கணையும்புரையுநுதல் விழிவெண்ணகைச் செவ்வாய்மென்றேன் - மின்னார்மருங்குற்பெருமுலையார் விழையமகிழ்நாபூம்பொழிற்கண், ணல்லும்விளர்ப்பவிருளளகத் தலர்த்தார்புனைந்துபல்லணியு - மணிந்துதங்கைத்திறமனையா ரறிவாறடியெதிர்நிறுத்தச், சொல்லுமதனிற்றம்முருவந் தோன்றநோக்கிவேறுமொரு-தோகைதன்னைவணிந்தொளித்திர் சொல்லுமிவளாரெனப்புலவி, புல்லுமளகைப்பெருமாட்டி புதுநீராடியருளுகவே - பொன்னார்த்தெறியுமதுநதிப்பூம் புதுநீராடியருளுகவே. (அ)

வேறு.

தோடுறுவனசமலர்த்தவிசுறைதரு நல்லாரோரிருவர் - தோமகனினபணியைப்புரிதரவருள் பொன்னேமாமணியே, வேடுறுமலர்கொடருச்சனைபுரிபவ ருள்வா

லூறமுதே - வேதுமிலெளியன்வழுத்திடுகவியையும் வல்லார்பீடுறவே, பாடுறுகவிதையெனக்கொடுமகிழ்தரு மின்னேமாமயிலே - பாதகமுருடரகத்தறவிருளுறு மல்லாயேநிறைவாய், நாடுறுகருணைசுரப்பவண் மதுநதி நன்னீராடுகவே -நாவலர்புகழுளைக்குயின் மதுநதி நன்னீராடுகவே. (௯)

பாகனவினியமொழிக்கிளியுலகருளன்னுய்வீாயடிப் - பாமலிபுகழ்புனைசிற்பரனிடமுறை மின்னேவேயுறமும், வாகமைபசியமடப்பிடிவளைதரு பொன்னேதேனெழுகு- மாமலர்துறுமுகுழற்கொடிபுகலியி னுள்ளார் வாழ்வுணவே, மாகனதனமுமிழ்நற்சுவையமுதரு ணைல்லாய்நாயடியேன் - வாழநின்மலிபுகழைச்சொலவருளிய பொல்லாமாமணியே, நாகர்கள்பரசுபதப்பனைமதுநதி நன்னீராடுகவே - நாவலர்புகழுளைக்குயின் மதுநதி நன்னீராடுகவே. (௧0)

நீராடற்பருவ முற்றிற்று.

## பொன்னூசற்பருவம்.

அண்ணியநின்வண்புகழ் திரண்டுநீண்டிருபாலமர்ந்தநின்றெனவொளிவிடு - மணிவச்சிரத்தூண நிறுவிநின்பிரதாப மமையத்திரண்டுநீண்டத், திண்ணியபுகழ்த்தலை கிடந்ததெனச்செங்கிரத் திரள்விட்டமத்தூண்டலைச் - சேர்த்தியப்பிரதாபம் விழுதுவீழ்த்தெனவ

கிற் செம்மணிவடங்களுற்றித், தண்ணியமின்சத்துவ குணமபரவியப்பிர தாபவிழ்சார்ந்ததென்னத்-தாளம ணிபலகை யம்மணிவடஞ்சார்த்தியத் தண்குணத்தவி சிலதுசெய், புண்ணியமிருந்தென்ன நீயிருந்தளகைமயி ல பொன்னுசலாடியருளே-பூரணனந்தவுரு வாய்ந்தவு மையம்பிகை பொன்னூசலாடியருளே. (க)

ஆன்றகதிர்விசித் துணங்கறலறப்பருகி யவிர்பது மாகத்திரு - லமைத்தணிவிளங்குறு மணித்தவிசிவ ர்ந்துநின் னழகுநிகழ்மேனிபசுமை, கான்றுபொலிதர நி யிருந்தலென்றுன்கறங் கவினுறவளர்த்தநின்செங்- கைத்தாமரைத்தவிசி னினிதுவந்துறைமர கதச்சிறை க்கிள்ளைநிகர, மான்றுநிசையறியாது தடுமாறிவெங்க திர்மதிக்கடவுணிற்பவோங்கி - வான்முகடுகிண்டப் புற ஞ்சென்றுதமிழ்முனி மலர்க்கையஞ்சாதவிந்தம, போ ன்றவெயில்புடையுடுத் தொளிருமளகைக்கிறைவி பொ ன்னூசலாடியருளே - பூரணனந்தவுரு வாய்ந்தவுமைய ம்பிகை பொன்னூசலாடியருளே. (உ)

இருள்பழுத்தனையவொழு கொளியமுழுநீலமணி யிடையறவொருங்கழுத்தி - யெழிலுறவமைத்தபொற் பலகையிசைநீயினி திவர்ந்திருந்திலகுதோற்ற, மருள் பழுத்தவிர்கட் பிராட்டிநின் திருமுன ரடைந்தெதிர்ப ணிந்தெழுந்தே - யலர்க்கரஞ்சிரமேற் குவித்தருவிவிழி பொழிய வாடித்துதிக்குமடியார், மருள்பழுத்தவிர்பழ

மலத்திரளொருங்குநீ வாங்கியொன்றுத்திரட்டி - மணி
ப்பலகையாக்கியவர் பான்மீட்டுருவண மதித்ததைமிதி
த்துறல்பொரப், பொருள்பழுத்தொழுகுமள காபுரிமட
க்கிள்ளை பொன்னூசலாடியருளே - பூரணானந்தவுரு வா
ய்ந்தவுமையம்பிகை பொன்னூசலாடியருளே. (ரு)

வனைபசியகதிர்களுன்றெளிர்மரகதஞ்சுற்றும்வை
த்துக்குயிற்றிநாப்பண் - மாணிக்கம்வைத்துக் குயிற்று
தவிசிடையெழில் வயங்குநின்னவயவமெலாங், கனைகட
ல்வளைக்குலங் கான்றவெண்ணித்திலக் கலனுமொளி
வச்சிரத்தின் - கலனுநிறைதரவணிந் தேறிநீயாடுறுங்கா
ட்சி நிறைநீர்வாவியிற், றனையகல்செழும்பா சடைப்பர
ப்பிடையில்விரிதாமரைச் செம்மலர்மிசைத் - தங்கன்ன
மலையா னசைந்தாடன்மானத் தவாதறம்பலவளர்த்து
ப், புனைபுகழுடுத்துமிளி ரளகையெம்பெருமாட்டி பொ
ன்னூசலாடியருளே - பூரணானந்தவுரு வாய்ந்தவுமை
யம்பிகை பொன்னூசலாடியருளே. (சு)

ஆதரம்பெருசமுழு வயிரங்குயிற்றிமிளி ரணிம
ணித்தவிசினடுவ - ணருளமிர்ததாரைமுக மதிபொழிய
நீயினி தமர்ந்தாடுகாட்சியன்பர், காதரந்தருபவ மொழி
ந்தனமொழிந்தனங் கண்பெற்றபேறுற்றனங் - காட்சி
தந்தமையினென வவர்முனன்னத்தின்வரல் காட்டவ
ன்றுலகளந்த, சீதரன்குறளென வளர்ந்தண்டகூடந்
திறந்துமேற்போகியெட்டுத் - திசைமுட்டவிங்கிமுத

ல் வாயில்வழியிருசுடர்கள் செலவாடகத்தியன்ற, பூதர
ம்புரைசிகரி யோங்குமளகைத்தலைவி பொன்னூசலாடிய
ருளே - பூரணானந்தவுரு வாய்ந்தவுமையம்பிகை பொ
ன்னூசலாடியருளே. (கூ

முள்ளார்ந்ததாட்பவள வம்போருகத்தவிசு முதிர்
சுவைநறுக்குடித்து- மொய்த்தளிமுழங்கநெட் டேடவி
ழ்க்குந்தவள முண்டகத்தவிசுமுறையுங், கள்ளார்ந்தபூ
ங்குழற் றிருமகளும்வெண்ணகைக் கலைமகளுமூசலிரு
பாற் - கவினநின்றணிவடங் கைதொட்டசைப்பவவர்க
ளின்மேனிமெய்யடியர்த, முள்ளார்ந்தவம்மைநின் றிரு
மேனிகான்றபா சொளியினனிமூழ்கியுலவா - தொளிரு
னசாருப முற்றவர்நிகர்ப்பவய னூர்திநிகர்தருமராளப்,
புள்ளார்ந்தமலர்வாவி சுலவுமளகைத்தலைவி பொன்னூ
சலாடியருளே- பூரணானந்தவுரு வாய்ந்தவுமையம்பிகை
பொன்னூசலாடியருளே. (கூ)

செயலையந்தருநீ யுதைந்தாடுதோறுமலர் செறிதர
ப்பூத்துதிர்க்குஞ் - செயலெம்பிராட்டிநின் றிருமுலைசுர
ந்தபால் செம்பொன்வள்ளத்தினூட்டக், கயலைவென்றி
டுகணார் மருவுசண்டையின்வந்த கவுணியர்குலக்கொழு
ந்தின் - கவின்மேனிபூறுறக் கருதிவாழ்திருமடங் கன
ல்கரவினிட்டகயவ, ரியலைமுழுதுங்கொண்ட கருமுருட்
டமணர்க ளிறைஞ்சருகனுக்குநிழல்செய் - தெய்துபழி
கழியநின் னடியருச்சனையினி தியற்றுதல்கடுப்பவறனு

ண், புயலைமுடிகொண்டமணிமாடமிளிரளகைமயில்பொ ன்னூசலாடியருளே - பூரணானந்தவுரு வாய்ந்தவுமைய ம்பிகை பொன்னூசலாடியருளே. (எ)

வானகங்குடிகொளர மாதரொதிரிருபால் வயங்கநி ரைநிரைநின்றுதம் - மலர்க்கையில்வெண்ணிறக் கவரிக ள்சுமந்துமிளிர் வளையொலித்திடவிரட்டல், தேனகங் கொள்ளுமலர் கொண்டருச்சனைசெய்து செந்நாத்தழு ம்பவாழ்த்திச்- சிந்திக்குமன்பர்கள் பிறப்பிறப்பெனுமூ சல் சேர்ந்தாடியலைவுற்றதா, லானகம்பந்தவிர்ந் தாடித் திளைக்கநின் னலர்கடைக்கட்பிறந்த - வருள்வெள்ளமிக் குப்பெருக்கெடுத்தார்த்துநிரை யலையெறிதலேய்ப்பயார் க்கும், போனகங்குறையா தளிக்குமளகைச் செல்வி பொன்னூசலாடியருளே - பூரணானந்தவுரு வாய்ந்தவு மையம்பிகை பொன்னூசலாடியருளே. (அ

மின்பூத்தசெஞ்சடையில் வெண்டிவலைதூற்றுபெ ரு வெள்ளஞ்சுமந்தணிமலர் - விரையடிவீற்றிருந் தரு ளும்விமலப்பிரான் விழிகணின்றிருவழகினை, மன்பூத் தபுதுவிருந் தாமொண்டுமொண்டுண்டு மகிழ்ந்தந்துதே க்கெறியநின் - மலர்கட்கடைப்பிறந் தெழுமருட்பெரு வெள்ள மன்னுமப்பெருமானுளத், தென்பூத்தபூந்தட நிரப்பியலைவீசிச் செழுங்கரையுடைப்பவாணி - திருவூச ல்பாடவர மாதர்கொண்டாடவான் றேவர்கூத்தாடவொ ளிகால், பொன்பூத்தமறுகுநிக ழளகையமர்பெண்ணர

சி பொன்னூசலாடியருளே - பூரணானந்தவுரு வாய்ந்த வுமையம்பிகை பொன்னூசலாடியருளே. (௯)

ஆவேறுபரமன்முடி யேறுமறைநூபுர மலம்புதிரு வடியுநுண்பட் - டாடைதிகழ்தருசிறு மருங்குலும்பல வுல கமைந்தமிளிர்திருவுதரமும், பாவேறுபரஞான மூறுபொற்கலசமும் பகர்மவளர்த்தகடகப்-பங்கயமு நித்தில வடபபசுங்களையும்பல் பலவூழிகண்டுபுலவர், நா வேறுமங்கலச் சங்குமினியமொழி நறவூறுகுமுதமு ம்புன் - னகையுமலர்நயனமுந் திலகநுதலுங்கருணை ந குவதனமதியுநறவப், பூவேறுகுழலுமழ கொழுகவள கைசெல்வி பொன்னூசலாடியருளே- பூரணானந்தவுரு வாய்ந்தவுமையம்பிகை பொன்னூசலாடியருளே. (௧0)

பொன்னூசற்பருவம் முற்றிற்று.

உமையம்பிகைபிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

